உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# ஸ்ரீ கச்சியப்ப சிவாச்சாரியார் புராணம்

(மூலமும் - உரையும்)




வெளியீடு

ஆதிசைவர்கள் நலவாழ்வு மையம்

கள்ளக்குறிச்சி - 606202.



இந்நூல் கூனம்பட்டி கல்யாணபுரி ஆதீனம்
57 ஆவது குருமஹாசந்நிதானம்
ஸ்ரீமத். ராஜ. சரவண மாணிக்கவாசக
குரு பரமாச்சார்ய சுவாமிகள்
பொற்கரங்களால் வெளியிடப்பட்டது

நம: பார்வதீபதயே ஹரஹர மஹாதேவ




உ

ஓம்

*குஹாய நம:*

# ஸ்ரீ கச்சியப்ப சிவாசாரியர் புராணம்

திருக்கைலாய பரம்பரை மறைஞான சம்பந்த சைவாசாரிய மரபினருள் ஒருவரான

சிதம்பரம் - **வாமதேவ முருகபட்டாரகர்** அவர்கள் இயற்றியது.

*உரையாசிரியர் :*


கல்யாணபுரி (எ) கூனம்பட்டி ஆதீனப் புலவர்

'தத்புருஷதேவநாம'

**சைவ. இராம. மாணிக்கவாசகன்**,M.A.,M.Phil.,Ph.D.,

(தமிழ்த்துறை, தேசியக் கல்லூரி, திருச்சிராப்பள்ளி)

சீகம்பட்டி - குளித்தலை.


*பதிப்பாசிரியர் :*


*சிவஸ்ரீ தில்லை S.கார்த்திகேய தத்புருஷசிவம்*,M.A.,



இந்நூல் - சேலம் -

இராஜகணபதி திருக்கோவில் அர்ச்சகர் -

**சிவஸ்ரீ - K.நாகராஜகுருக்கள் - அமுதா**

அவர்களின் கைங்கரிய உதவிகொண்டு

வெளியிடப்படுகிறது.

**104 ஆண்டுகளுக்கு பிறகு**

மீள்பதிப்பும் - வெளியீடும் :

**ஆதிசைவர்கள் நலவாழ்வு மையம்**

கள்ளக்குறிச்சி - 606 202.

# நூல் விபரங்கள்

நூல் பெயர் : ஸ்ரீ கச்சியப்ப சிவாசாரியர் புராணம்

நூல் ஆசிரியர் : வாமதேவ முருகபட்டாரகர் அவர்கள்

நூலின் வகை : சைவசமயப் பெரியோரின் புராணம்.

முதற் பதிப்பு : 10-09-1917

மீள் பதிப்பு : பிலவ-ளு புரட்டாசி-மீ
பூரம் நட்சத்திரம் (4-10-2021)

நூலின் அளவு : 1/8 டெம்மி

பக்கங்கள் : 96

தாள் : 16 கி.கி.

எழுத்து : 12 புள்ளிகள்

படிகள் : 1000

விலை : **100/-**

வெளியீடும்,
கிடைக்குமிடமும் : தில்லை சிவஸ்ரீ எஸ்.கார்த்திகேய தத்புருஷசிவம்
ஆதிசைவர்கள் நலவாழ்வு மையம்
27, ஸ்ரீராமச்சந்திரா நகர்,
கள்ளக்குறிச்சி-606 202.
செல்லிடப்பேசி : 97518-48933

நூல் அமைப்பு : ஸ்ரீகணநாத நாயனார் நூலகம்
39/22, கிருஷ்ணாபுரம் முதல்தெரு,
திருச்சிராப்பள்ளி-620 008.
செல்லிடப்பேசி : 99528-06121.

அச்சாக்கம் : ஆர்.ஜி. பிரிண்டர்ஸ், 30, சின்னக்கடைத்தெரு,
திருச்சிராப்பள்ளி-2. போன் : 0431-2700417, 98949-08437.

## பொருளடக்கம்



### ஸ்ரீ கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள் துதிகள்

"ஆகம ஞானசாரம் அறுமுக னருளாற் பெற்று
மாகரும்வியக்கும் வண்ணம் மாபெரும் புராணஞ் செய்தான்
ஏகமா மரத்தின் கீழே யிருந்தரு ளிறைவ னூரில்
சாகரம் கச்சியப்பரின் தாளிணை போற்றி செய்வாம்".

"புராணஞ் சொன்னவர்கள் பலபே ருண்டு
புண்ணியனே உன்போலச் சொன்னா ரில்லை
பராபரன் சிவனேகாண் பதிதா னென்றும்
பங்கயன்மால் முதலானோர் பசுக்க ளென்றும்
திரமான வேதவா கமப் பொருளை
தெளிவாக எமக்கருளிச் செய்தாய் நல்ல
வரமான கச்சிநகர்க் கச்சி யப்ப
மாதவனே நின்னடிகள் போற்றி போற்றி".

- ஆக்கியோர் :

*குளித்தலை சீகம்பட்டி சைவ. சு.இராமலிங்கம் ஐயா*

உ
ஓம்
குஹாய நம:

# முதற்பதிப்பின் முன்னுரை

இந்நூலாசிரியர் திருக்கைலாய பரம்பரை சிதம்பரம் வாமதேவ மறைஞான சம்பந்த சைவாசாரிய மரபினராவர்.

இவர் தந்தையார் பொன்னுபட்டாரகர் என்பவர்.

இவர் கல்வி, அறிவு, சிவபக்தி, அடியார்பக்தி முதலிய நற்குணச் சிறப்புடையரென்பது இவரியற்றிய சந்தானாசாரியர் புராண முதலிய நூல்களான் இனிது விளங்கும்.

இவர் சிவஸ்தல யாத்திரையை மேற்கொண்டு, தமிழ் நாட்டிலுள்ள சிவஸ்தலங்கடோறும் சென்று, சிவபுராண படனஞ்செய்து, ஆங்காங்குள்ள சிவபக்த சிரோன்மணிகளுக்குச் சிவானந்தப் பெருக்கை விளைவித்தவர். இவர் தாங்கொண்ட பெயருக்கேற்ப, முருகவேளிடத்து மெய்யன்புடையராய்ச் சிவபுராணோத் கிருஷ்டமாகிய ஸ்கந்தபுராண படனஞ் செய்யுங்கால் அதனைத் தமிழின் மொழி பெயர்த்த, ஸ்ரீ கச்சியப்ப சிவாசாரியர் செய்யுட்களின் சொற்சுவை, பொருட் சுவைகளையும், அவர் ஷண்முகப்பெருமான் அனுக்கிரகம் பெற்றமையையும் இடை இடையே வியந்து பாராட்டும் பெற்றியினராவர்.

இதனையறிந்த சிரவணானந்த மெய்யன்பினருட் சிலர், 'அக்கச்சியப்ப சிவாசாரியருடைய திவ்விய சரித்திராமிர்தத்தை, செந்தமிழ்ச் செய்யுளின் வடிவாற் சிரவணானந்தமுற விழை கின்றனம். அஃதை அவ்வாறியற்றித் தருக' வென வேண்டின மையின் இவர் இந்நூலை செந்தமிழ்ச் செய்யுள் வடிவினிற் செய்து முடித்தனர்.

இஃதிவ்வாறாக:-

இந்நூலாசிரியர் குமாரர் மாணிக்கபட்டாரகர்அவர்களும் யானும் வேதாரணியம் எனதன்பின் மிக்க அருணாசலதேசிகர்

அவர்களும் ஸ்கந்தபுராணத்தில் செய்யுட்களின் பொருளமைதியைப் பற்றி உசாவுவது அவர்கள் அவற்றை நன்குணர்த்திய பின்னர், கச்சியப்ப சிவாசாரியர் ஷண்முகானுக்கிரகம் பெற்ற பெருந்தகையார் எனவும், இவர் திருவாக்கிற் பிறந்த ஸ்கந்தபுராணத்தின் யேனைய செய்யுட்களின் பொருளமைதிகளும் நன்றே இனிமை பயக்குமெனவும் கூறி, தம் தந்தையாராகிய ஸ்ரீ கச்சியப்ப சிவாசாரியர் புராணச் செய்யுட்கள் சிலவற்றை வாசித்து அவற்றின் மெய்ப்பொருட்களை விரித்துணர்த்தினார்.

அப்பொழுது ஷண்முகப்பெருமானின் திருவருட் தன்மையும், அப்பெருமானிடத்து அன்புபூண்ட ஸ்ரீகச்சியப்ப சிவாசாரியரின் பக்திவன்மையும் எனக்குப் பேரான இன்பப் பெருக்கை விளைத்தமையாலும், எனதன்புரிமை அருணாசல தேசிகர் அவர்கள் தாமும் அப்பேரானந்தத்தை அனுபவித்து ''இதுபோன்று எவரும் இப்பேரானந்தமுறுமாறு இதனை யச்சிட்டு வெளியிடுக'' என என்று பிரேரித்தமையாலும், இதனை அச்சிடுவித்தேன்.

இந்தநூலைப் பெறும் மெய்யன்பர்கள் அனைவரும் இதன் சொற்சுவை, பொருட்சுவைகளை ஆராய்ந்தறிந்து பேரான பெருஞ் செல்வமுறுமாறு வேண்டுகின்றேன்.

இங்ஙனம்<br>
**S. P. பொன்னுசாமிபிள்ளை**<br>
திருச்சிற்றம்பலம்<br>
மாயவரம் தாலுக்கா.



உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# ஸ்ரீ கச்சியப்ப சிவாசாரியர் புராண வசனம்

தொண்டைமண்டலத்திற் சிறந்து விளங்காநின்ற காஞ்சிபுரத்தின் கண்ணே, ஆதிசைவர் குலத்திலே, கல்வியறிவு ஒழுக்கங்களினாலுஞ் சிவபத்தி சிவஞானங்களினாலுஞ் சிறப்புற்றோங்கிய காளத்தியப்பசிவாசாரியர் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் காஞ்சீபுரத்துள்ள குமரகோட்டத்து அருச்சகருள் ஒருவர். அவர் நெடுங்காலம் புத்திரனில்லாமையாற் பெருங் கவலைகொண்டு, புத்திர பாக்கியத்தின் பொருட்டுக் குமர கோட்டத்தின்கண் எழுந்தருளிய பெருங்கருணைக்கடலாகிய சுப்பிரமணியக்கடவுளை விதிப்படி சிர்த்தையோடும் உபாசித்துக் கொண்டு வந்தார்.

வரும்பொழுது, அக்கடவுளது திருவருளினாலே, தமிழ் நாட்டார்கள் சுப்பிரமணியபத்தி பெற்றுய்யும்பொருட்டு, அச்சிவாசாரியருக்கு அவருடைய கற்பினிற்சிறந்த பத்தினியாரது அருமைத்திருவயிற்றின் ஒருசற்புத்திரர் திருவவதாரஞ் செய்தார்.

அப்புத்திரருக்குக் கச்சியப்பர் என நாமகரணஞ் செய்யப் பட்டது. அவர் ஐந்தாம்வயசிலே வித்தியாரம்பஞ் செயப்பெற்று, சமஸ்கிருதம் தமிழ் என்னும் இரண்டுபாஷைகளையுங் கற்பாராயினார். அன்பு அருள் வாய்மை பொறை அடக்கம் முதலிய நற்குணங்களெல்லாம் அவரோடுடன் பிறந்து அவரோடுடன் வளர்ந்தன.

அவர் ஏழாம் வயசிலே உபநயனஞ் செயப்பெற்று, வேதாத்தியயனஞ் செய்வாராயினார். சில காலத்துள்ளே சம்ஸ்கிருதத்தில் வேத வேதாங்கங்களையும் தமிழில் இலக்கண இலக்கியங்களையும் கற்று வல்லராயினார்.

அவர் சிலகாலமாயபின் சமயதீக்ஷை பெற்று, தமிழ் வேதமாகிய தேவார திருவாசகங்களை ஓதுவாராயினார். அதன்பின்

விசேஷதீக்ஷை பெற்றுச் சைவாகமங்களிற் கிரியாகாண்டங்களைக் கற்றறிந்து கொண்டார். அதன்பின் நிருவாணதீக்ஷையும் ஆசாரியாபிஷேகமும் பெற்று, சைவாகமத்தின் ஞானகாண்டங் களை ஓதி, அவற்றின் பொருளையும் தேவார திருவாசகங்களின் பொருளையுங் கேட்டு, அப்பொருள் வேதத்தின் ஞானகாண்டங் களாகிய உபநிடதங்களின் பொருளோடு அபேதமா யிருக்கக் கண்டு, அதனைச் சிந்தித்துத் தெளிந்து கொண்டார்.

இங்ஙனம் தெளிவுற்ற அவர் தம்மிடத்து அடிமைகளாய்க் குழுமி வணங்கிநின்று மெய்யன்புறூஉம் நன்மாணாக்கர்கள் பிறவிப்பிணியின்நீங்கி மேம்பட்ட திருவருள் அடைவதற்குரிய பல அருணூல்களை யெல்லாம் அவர்கட்கு உபதேசித்து அமர்வாராயினார்.

இவ்வியல்புடையராய் விளக்கமுற்ற கச்சியப்பசிவாசாரியர் குமரகோட்டத்துச் சுப்பிரமணியக் கடவுளை மெய்யன்போடு பூசைசெய்துகொண்டு வந்தார். ஒருநாட் சுப்பிரமணியக்கடவுள் கச்சியப்பசிவாசாரியருக்குச் சொப்பனத்திலேதோன்றி, "அன்பனே, நீ காந்தபுராணத்து ஆறுசங்கிதைகளுட் சங்கரசங்கிதையின் முதற்கண்டமாகிய சிவரகசியகண்டத்தினுள்ள நமது சரித்திரத்தைக் கந்தபுராணம் எனப் பெயரிட்டுத் தமிழிலே பெருங்காப்பியமாகப் பாடக்கடவாய்" என்று ஆஞ்ஞாபித்து, "திகடசக்கரச் செம்முக மைந்துளான்" என்று அடியெடுத்துக் கொடுத்து மறைந்தருளினார்.

உடனே கச்சியப்பசிவாசாரியர் விழித்தெழுந்து, அழலிடைப் பட்ட மெழுகுபோல நெஞ்சநெக்குருக, உரோமஞ்சிலிர்ப்ப, உரை தடுமாற, கரையற்ற இன்பக்கடலின் அழுந்தி, "ஒன்றுக்கும் பற்றாத புழுத்த நாயினுங் கடையனாகிய தமியேனையும் ஒருபொருட் படுத்து வந்தருளிச்செய்த எம்பெருமானாகிய சுப்பிரமணியக் கடவுளது பெருங்கருணைத்திறம் இருந்தபடி என்னை என்னை" என்று ஆனந்தக் கூத்தாடினார்.

மற்றைத்தினத்திலே கச்சியப்பசிவாசாரியர் நித்திய கரும முடித்துக்கொண்டு, சுப்பிரமணியபூசை செய்தபின் புராணம்பாட ஆரம்பித்தருளினார். நாடோறும் நூறு செய்யுள் பாடி, அவை எழுதப்பட்ட ஏட்டையும், எழுத்தாணியையும், இராத்திரி காலபூசை

முற்றியபின் குமரகோட்டத்தடிகளுடைய திருவடிக்கீழ் வைத்துவிட்டுத் திருக்கதவந் திருக்காப்பிட்டுக்கொண்டு தமது திருமாளிகைக்குப் போவார்.

பிற்றைநாட்காலையிலே நித்தியகரும முடித்துக் கொண்டு, பூசையின்பொருட்டுத் திருக்கோயிலினுள்ளே புகுந்து, ஏட்டை எடுத்துப்பார்த்து, அதிற் சிலவிடங்களிலே திருத்தப்பட்டிருத்தல் கண்டு, அதனைச் சிரமேற்கொண்டு ஆனந்தபரவசராய்ச் சிறிது பொழுது நின்று பின் பூசைசெய்வார்.

இவ்வாறே கச்சியப்பசிவாசாரியார் கந்தபுராணம்பாடி முடித்தபின், சாலிவாகனசகாப்தம் எழுநூற்றின்கண், அதனை குமரக்கோட்டத்தில் அரங்கேற்றும் பொருட்டுச் சுபதினமுஞ், சுபமுகூர்த்தமும் நிச்சயித்துக்கொண்டு, எங்குமுள்ள சிவனடியார் கள் எல்லாருக்கும் பத்திரம் விடுத்தருளினார். ஏவலாளர்கள் திருக்கோயிலையும், திருவீதிகளையும் மிக அலங்கரித்தார்கள். சுட்டப்பட்ட சுபதினத்திலே, திருநெறித்தமிழாகிய தேவார திருவாசகங்களில் வல்ல பெரியோர்களும், சிவாகமவிற்பன்னர் களும், வேதவேதாங்க பண்டிதர்களும், தமிழ்ப்புலவர்களும், இராசாக்களும், பிரபுக்களும், பிறருமாகிய எல்லாரும் வந்து கூடினார்கள்.

கச்சியப்பசிவாசாரியர் குமரகோட்டத்தடிகளைப் பூசை செய்து, அவர் சந்நிதானத்திலே மெழுகிப் பீடமிட்டு, அதின்மேற் பட்டைவிரித்து, புஷ்பங்களைத் தூவித், தூபங்கொடுத்து ஆசனங்கற்பித்து, கந்தபுராணத்திருமுறையை அதன்மேல்வைத்து அருச்சித்து வணங்கித் துதித்தார்.

பின்பு இருந்துகொண்டு, ''திகட சக்கரச் செம்முக மைந்துளான்'' என்னும் முதற்செய்யுளை ஒருமுறை வாசித்து, ''திகழ் தசக்கரச் செம்முகம் ஐந்து உளான்'' என்றெடுத்து ''விளங்காநின்ற பத்துத்திருக்கைகளும் செவ்விய ஐந்து திருமுகங்களுமுள்ள சிவபெருமானுடைய'' என்று பொருளருளிச் செய்தார்.

உடனே அங்கிருந்த தமிழ்ப்புலவர்களுள் ஒருவர் ''சுவாமிகாள்! திகழ் தசம் - திகடசம் எனப்புணர்தற்கு விதி தொல்காப்பிய

முதலிய இலக்கணநூல்களுள் ஒன்றிலாயினும் இல்லையே'' என்றார்.

அதற்குக் கச்சியப்ப சிவாசாரியர் ''தாங்கள் கூறியதொக்கும், ஆயின் இம்முதலடி என்வாக்கன்று; சங்கப்புலவராகிய சுப்பிரமணியக் கடவுளது திருவாக்கு; அவரே எனக்கு இவ்வடியெடுத்துத் தந்தருளினர்'' என்றார்.

அதுகேட்ட அப்புலவர் புன்முறுவல் செய்து, ''சுப்பிரமணியக் கடவுள் சுவாமிகளுக்கு இவ்வடியெடுத்துத் தந்தருளியது சத்தியமாயின் ஆகுக. ஆயினும், அது இரகசியம். அதனை நாங்கள் அங்கிகரிப்பது எங்ஙனம்! அக்கடவுள் சுவாமிகளுக்குத் தோன்றியதுபோல எங்களுக்குந் தோன்றி, ''இவ்வடி நாமே எடுத்துக் கொடுத்தருளினோம்'' என்று திருவாய்மலர்ந்தருளின் அங்கீகரிப்பேம்; அன்றேல், இதற்கு யாதானுமோர் இலக்கண நூலில் விதிகாட்டின் அங்கீகரிப்பேம்; அல்லாக்கால், அரங்கேற்ற வொட்டேம்'' என்றார்.

கச்சியப்பசிவாசாரியர் ''இவ்விரண்டினுள் ஒன்று நாளை செயப்படும்'' என்றருளிச் செய்து சபையாரைப் போக்கிவிட்டு, அற்றைத் தினத்திலே திருவமுது செய்யாது, இராத்திரி காலபூசைமுற்றியபின் திருக்கதவந் திருக்காப்பிட்டுக்கொண்டு சந்நிதியிலே தரையிலே சயனித்தருளினார்.

அப்பொழுது சுப்பிரமணியக்கடவுள் கச்சியப்ப சிவாசாரி யருக்குச் சொப்பனத்திலே தோன்றி, ''அன்பனே, சோழ தேசத்தில் வீரசோழியம் என்று ஓரிலக்கண நூலிருக்கின்றது; திகழ்தசம் திகடசம் எனப்புணர்தற்கு விதி அந்நூலிற் சந்திபடலத்திற் பதினெட்டாஞ் செய்யுளிலிருக்கின்றது; சோழதேசத்துப் புலவனொருவன் அந்நூலை நாளைக்கு இவ்விடத்திற் கொண்டுவந்து அவ்விதியை எல்லாருக்குங் காட்டுவன்'' என்று திருவாய்மலர்ந்து மறைந்தருளினார்.

மற்றைநாட்சபையார் எல்லாருங் கூடியிருந்தபொழுது கச்சியப்பசிவாசாரியர் தமக்கு முருகக்கடவுள் சொப்பனத்தில் அருளிச்செய்தமையை அவர்களுக்குச் சொல்லியருளினார். உடனே ஒருபுலவர் ஒருபுத்தகங் கையிற்கொண்டு அங்கே வந்தனர். அவரை

அங்குள்ளோர்கள் நோக்கி, ''நீர் யாவர்? உமது கையிற்புத்தகம் யாது?'' என்று வினாவினார்கள். அதற்கு அப்புலவர்''நாம் சோழதேசத்துள்ளேம்; இப்புத்தகம் வீரசோழியம்''என்றார். விரைந்து சென்று அப்புத்தகத்தை வாங்கிச் சந்திபடலத்திற் பதினெட்டாஞ் செய்யுளை வாசித்துத் திகடசக்கரம் என்னும் புணர்ச்சிக்கு விதி அதிலிருத்தலை உணர்ந்து விம்மிதமும் மகிழ்ச்சியுமுற்றனர். அப்பொழுது முன்னைநாளின் ஆக்ஷேபித்த புலவர் விரைந்து சென்று அப்புத்தகத்தை வாங்கிச் சந்திபடலத்திற் பதினெட்டாஞ் செய்யுளை வாசித்துத் திகடசக்கரம் என்னும் புணர்ச்சிக்கு விதி அதிலிருத்தலை உணர்ந்து விம்மிதமும் மகிழ்ச்சியும் உற்றனர்.

மற்றைத் தமிழ்ப் புலவர்களும் ஒருவர் பின் ஒருவராக அதனை வாங்கிப் பார்த்து விம்மிதமும் மகிழ்ச்சியுமுற்றார்கள். இறுதியிலே சோழதேசத்துப் புலவர் அப்புத்தகத்தைக் கச்சியப்பசிவாசாரியர் கையிற் கொடுத்து, சபையார் எல்லாரையும் நோக்கி, ''ஆக்ஷேபம் ஒழிந்ததா ஒழிந்ததா!'' என்று சொல்லிவிட்டு மறைந்தருளினார்.

உடனே கச்சியப்ப சிவாசாரியர் தமையாண்டருளிய அறுமுகக் கடவுளது பெருங்கருணைத் திறத்தை நினைந்து நினைந்து, சரீரம் விதிர்ப்புற, மயிர்க்காறோறும் திவலைஉண்டாக, என்பெல்லாம் நெக்கு நெக்குருக, மதகிடைப் புறப்படுஞ்சலம் போல ஆனந்தபாஷ்பம் பொழியப் பரானந்த பரவசராய் எழுந்தருளி யிருந்நார்.

அப்பொழுது சபையார் எல்லாரும் ''இங்ஙனம் எழுந்தருளி வந்த புலவர் குமாரக்கடவுளே'' என்று துணிந்து ஆச்சரியமடைந்து, வெயிலிடைப்பட்ட வெண்ணெய்போல மனங்கசிந்துருக உரோமஞ்சிலிர்ப்பக் குறுவேர்வைகொள்ள ஆனந்தவருவிசொரிய ஆனந்தக்கூத்தாடிக் கச்சியப்ப சிவாசாரியருடைய பெருமையை நன்குணர்ந்து, அவர் திருவடிகளில் அடியற்ற மரம்போல் விழுந்து நமஸ்கரித்து அவரைத் தோத்திரஞ் செய்தார்கள்.

ஆக்ஷேபஞ்செய்த புலவர் கச்சியப்பசிவாசாரியரைப் பலதரமும் நமஸ்கரித்து, ''எம்பெருமானே, புழுத்தநாயினுங் கடையேனாகிய தமியேன் சுவாமிகளுடைய மகிமையைச் சிறிதும்

அறியாது ஆக்ஷேபித்த பெருங்குற்றத்தைப் பொறுத்து அடியேன்மீது திருவருள் சுரந்தருளுக'' என்று அதிவிநயத்தோடு பிரார்த்தித்து, மீட்டும் அடியற்ற மரம்போல் வீழ்ந்து கிடந்தார்.

கச்சியப்பசிவாசாரியர் எழுந்து, அப்புலவருடைய இரண்டுகைகளையும் தம்முடைய அருமைத் திருக்கைகளினாலே பற்றியெடுத்து இறுகத்தழுவி, ''ஐயரே, தங்கள் ஆக்ஷேபத்தினாலன்றோ இச்சபையார் எல்லாருக்கும் திருவருளினுண்மை வெளிப்பட்டது. இதன் பொருட்டுத் தங்களுக்குச் செயற்பாலதாகிய கைம்மாறு யாது! அறியேம் அறியேம்'' என்று பாராட்டியருளினார்.

அதன்பின் சபையாரெல்லாரும் நமஸ்கரித்து, ''சுவாமிகாள், இனி இப்புராணத்தைத் தடையின்றி அரங்கேற்ற ஆரம்பித்தருளுக'' என்று விண்ணப்பஞ்செய்தார்கள். அங்ஙனமே கச்சியப்ப சிவாசாரியர் அரங்கேற்றுவாராயினார்.

காஞ்சித்திருநகரத்துள்ள ஆதிசைவர்கள் முதலானவர்களுக்கும் கந்தபுராணங்கேட்க வந்த எண்ணிறந்த அடியார்களுக்கும் போசனமுதலியவைகளெல்லாம் தொண்டை நாட்டுள்ள இருபத்துநான்கு கோட்டத்து வேளாளப்பிரபுக்களுடைய செலவினாலே நடந்தன. எல்லாரும் நியமமாக வந்து பேராசையோடு கேட்கக் கச்சியப்பசிவாசாரியர் தினந்தோறும் புராணம் வாசித்துப் பொருள்சொல்லி ஒருவருஷத்திலே முடித்தருளினார்.

புராணமுற்றுப் பெற்றவுடனே கச்சியப்பசிவாசாரியர் புராணத்திருமுறையை விதிப்படி அருச்சனை செய்து நமஸ்கரித்தார். அப்பொழுது அங்குள்ள எத்திறத்தார்களும் அன்பினோடு விம்மிவிம்மித் தண்டாகாரமாக விழுந்து, கச்சியப்பசிவாசாரியரை நமஸ்கரித்தெழுந்து இரண்டு கைகளுஞ் சிரசின் மேலேறிக் குவிய நின்று, துதித்தார்கள்.

கச்சியப்பசிவாசாரியர் கந்தபுராணத்திருமுறையோடுந் தந்தச்சிவிகையில் எழுந்தருளி இருபத்துநான்கு கோட்டத்துமுள்ள வேளாளப்பிரபுக்களுக்குள்ளே சிலர் சிவிகை தாங்க, சிலர் வெண்சாமரம் வீச, சிலர் குடைகொடி பிடிக்க, நானாவித மங்கல

வாத்தியவொலியினாலே திக்குகளெல்லாஞ் செவிடுபட, பிராமணர்கள் வேதகோஷஞ்செய்ய, சிவனடியார்கள் **சரவணபவ சரவணபவ** என்று சொல்லும் பேரொலிதழைக்க, திருநகரவாசிகள் திருவீதிகள்தோறும் சுத்தி செய்து வாழைகள் நாட்டித் தோரணங்கள் நிறைத்துப் பூமாலைகள் தூக்கிப் பூரணகும்பங்கள் வைத்துப் பொரி தூவித் திருவிளக்கேற்றி அறுகெடுக்க, தமது அருமைத் திருமேனியிலே தரிக்கப்பட்ட திரிபுண்டரத்தின் அழகையும், உருத்திராக்ஷமாலைகளின் அழகையும், சின்முத்திரையும், திருக்கண்களினின்றும் பொழியும் பரமானந்த வாரியையும், அடியார்கள் கண்டு மனநெக்கு நெக்குருக வணங்கித் துதித்து ஆனந்தக்கூத்தாட, திருவீதிவலஞ்செய்து, குமரகோட்டச் சந்நிதியை அடைந்து, சிவிகையினின்றும் இறங்கித் திருமுறையைத் திருக்கோயிலினுள்ளே கொண்டுபோய்த் திருமுன்னே வைத்தருளினார்.

உடனே எல்லாரும் கச்சியப்பசிவாசாரியரை, அவர் "அமையும் அமையும்" என்றவழியும் தவிராது, ஆராமையினாலே பலகாலும் நமஸ்கரித்து, "பரமகருணாநிதியாகிய எம்பெருமான் தமிழ் நாட்டார் எல்லாரும் பிழைக்கும்பொருட்டுத் திருவாய்மலர்ந்தருளிய இப்புராணமாகிய திவ்வியாமிர்தத்தை அடியேங்கள் எஞ்செவிவாய்மடுத்து உய்ந்தனம் உய்ந்தனம்" என்று விண்ணப்பஞ்செய்து இன்பமுற்றார்கள்.

தமிழ்நாடெங்குமுள்ள சிவனடியார்களெல்லாரும், இக் கந்தபுராணத்தை மிகப்பாராட்டி, சிரத்தையோடு எழுதுவோரும், வாசிப்போரும், பொருள்சொல்வோரும், கேட்போருமாய், இதன் சொற்சுவை பொருட்சுவைகளை அநுபவித்துப் பேரானந்தப் பெருஞ்செல்வம் அடைந்தார்கள்.






## அருள் வாழ்த்துரை

"வலம்புரி மிடற்றுத் தேவி யிடமுற மன்றுள்ஞான
நலம்புரி வியாள யோகர் வரத்தினினாலும் இந்த
நிலம்புரி தவத்தான் மிக்க ஆனந்த நிருத்தஞ் செய்யுங்
குலம்புரி தேவதேவன் அடிமலர் குறித்து வாழ்வோம்".

*கள்ளக்குறிச்சி - ஆதிசைவர்கள் நலவாழ்வு மையத்தின் சார்பாக "**ஸ்ரீகச்சியப்பசிவாசாரியார் புராணம்**" என்ற நூல் உரையுடன் வெளியிடப்பெற உள்ளமை அறிந்து மகிழ்ச்சி அடைகின்றோம்.*

*இந்நூல் மறைஞான சம்பந்தரின் மரபினராகிய சிதம்பரம் - வாமதேவ முருகப்பட்டாரகர் அவர்கள் இயற்றியதாகக் கூறப்படுகின்றது. இந்நூலினைக் கூனம்பட்டி ஆதீனப்புலவர் சிவத்திரு. இராம. மாணிக்கவாசகன் அவர்களின் உரையுடன் வெளியிடுதல் பாராட்டத்தக்கது.*

*'கந்தபுராணம்' என்ற பெருஞ்சிறப்புப்பெற்ற நூலினை அருளிய **ஸ்ரீகச்சியப்பசிவாசாரியார்** அவர்களின் வரலாறு அவசியம் யாவராலும் அறியப்படவேண்டும். நூலாசிரியரின் பெருமையை அறிவதன்மூலம் நூலின் பெருமை நன்கு உணரப்பட்டு அந்நூலினைக் கற்பதில் ஆர்வம் மேலோங்கும்.*

"உமைதருங் குமரமூர்த்தி ஒளிரிரு நளினபாதத்(து)
இமைதரு பொழுது(ம்) நீங்கா திலங்குமெய்யன் பிற்பூசை
சமைதரு கச்சியப்பத் தவா வருட்குரவன்".

என்று இந்நூல் 79-ஆம் பாடலின்மூலம் ஸ்ரீகச்சியப்ப சிவாசாரியார் போற்றப்பெறுதல் காண்க. பாடல்களின் பொருளைக் கற்போர் தெளிவாகப் புரிந்துகொள்ளும் வண்ணம் உரையாசிரியர் பொழிப்புரை எழுதியுள்ளார். அடிக் குறிப்பாகத் தரப்பட்டுள்ள அருஞ்சொற்பொருளும் மிகவும் பயனுள்ளது.

கள்ளக்குறிச்சி **ஆதிசைவர்கள் நலவாழ்வு மையத்தின்** நிறுவனர் **தில்லை சிவஸ்ரீ எஸ்.கார்த்திகேயசிவம்** அவர்கள் ஆண்டுதோறும் இதுபோன்று சிறந்த நூல்களைப் பதிப்பித்து வெளியிட்டு வருதல் பாராட்டத்தக்கது. அவர்களின் பதிப்புப் பணிகள் மேன்மேலும் சிறந்தோங்கிடவும், அவர்களுக்கும், உரையாசிரியருக்கும், நூலைக் கற்போருக்கும் இருமை வளங்களும் சிவபத்தி சிவஞானங்களும் சித்திக்க வேண்டியும் நமது ஆன்மார்த்த மூர்த்திகளாகிய ஸ்ரீஞானமா நடராஜப் பெருமான் திருவடி மலர்களைச் சிந்தித்து வாழ்த்துகின்றோம்.








**குருபாதம்**

"ஞாலம் நின்புகழே மிகவேண்டும் தென்
ஆலவாயில் உறையும்எம் ஆதியே"

**திருக்கயிலாயப் பரம்பரைத் தருமைஆதீனம்
27-ஆவது குருமகா சந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ மாசிலாமணி தேசிக
ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்**



**தருமபுரம், மயிலாடுதுறை (அஞ்சல்) 609 001.**

## ஆசியுரை

**"வான்முகில் வழாது பெய்க மலிவளம்சுரக்க மன்னன்
கோன்முறை அரசுசெய்க குறைவிலாது உயிர்கள்வாழ்க
நான்மறை அறங்கள் ஓங்க நற்றவம் வேள்வி மல்க
மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகமெல்லாம்."**

- கந்தபுராணம்

"நகரேஷு காஞ்சி" என்று சிறப்பிக்கப்படும் காஞ்சி புரத்தில் உள்ள குமரகோட்டத்தில் சிவாசாரியாராகத் தொண்டாற்றியவர் கச்சியப்பர். நல்லூழும், திருவருளும் கூட்டுவிக்க அவரது கனவில் முருகப்பெருமான் தோன்றி "திகட சக்கரச் செம்முகம் ஐந்துளான்" என அடியெடுத்துக் கொடுத்து சிவரகசிய காண்டத்திலுள்ள நமது சரித்திரத்தைப் "பெருங்காப்பியமாய் பாடக்கடவாய்" என ஆஞ்ஞாபிக்க கச்சியப்பர் பாடியதே கந்தபுராணம். 'திகடசக்கரம்' என்ற சொல்லின் புணர்ச்சிவிதி குறித்த ஐயம் புலவர்களுக்கு ஏற்பட்டபோது 'வீரசோழியம்' என்ற நூலையும் வெளிப் படுத்தி, அவ்வையத்தையும் முருகப்பெருமானே நீக்கினார் என்பது அருள் வரலாறு.

ஆறு காண்டங்களையும், 10,346 பாடல்களையும் கொண்டு தமிழிலே பெரும்புராணமாகத் திகழும் கந்த புராணம் 'நவில்தொறும் நவில்தொறும் நாநயம்பயப்பது. பயில்தொறும் பயில்தொறும் பக்தி ஞானம் வளர்ப்பது' 'புதுமயிலூர்பரன் புராணத்துற்றிடாக் கதையிலை' எனும் சிறப்புக்குரியது.

இப்போற்றுதலுக்குரிய கந்தபுராணத்தை இயற்றிய ஸ்ரீகச்சியப்பசிவாசாரியாருடைய பிறப்பு, ஆறுமுகக் கடவுள் அவருக்கு அருள்பாலித்த விதம், கந்தபுராணத்தை அவர் இயற்றி அரங்கேற்றியத்திறன் ஆகியவற்றை 171 விருத்தங்களில் **"ஸ்ரீகச்சியப்பசிவாசாரியார் புராணம்"** என்ற தலைப்பிலே திருக்கயிலாய பரம்பரை மறைஞான சம்பந்த திருமரபினருள் ஒருவரான சிதம்பரம் 'வாமதேவ முருகபட்டாரகர்'. இயற்றியுள்ளார்.

இந்நூலில் மூலப்பாடல் மட்டுமே இருந்த நிலையில் அவற்றுக்கு உரை எழுதப்பட்டு மறுபதிப்பு செய்யப்படுவது அறிந்தோம். இப்பணியைச் சிரமேற்கொண்டு செய்யும் நம் பேரன்பிற்குப் பாத்திரமான ஆதீன அன்பர் **எஸ்.கார்த்திகேய சிவம்** அவர்களுக்கு ஆசிர்வாதங்கள். அவரின் சீரிய முயற்சியால் கள்ளக்குறிச்சியில் அமைந்துள்ள **'ஆதிசைவர்கள் நலவாழ்வு மையத்தின்'** சார்பாக ஆண்டுதோறும் பழமையான சைவ சமய நூல்கள் மறுபதிப்பு செய்யப்பட்டு வெளியிடப்படுகின்றது. இது சைவத்திற்கும், தமிழுக்குமாகியத் திருத்தொண்டு.

ஆதிசைவர்கள் நலவாழ்வு மைய நிர்வாகிகள் இந்நூலினைப் பதிப்பித்து வெளியிடும் தில்லை எஸ்.கார்த்திகேய சிவம், நூலைப் படித்து பயனுய்யும் அன்பர்கள் அனைவருக்கும் குருவருளும், திருவருளும் சித்திக்க எல்லாம்வல்ல ஸ்ரீ செந்தமிழ்ச் சொக்கனின் திருவருளைச் சிந்திக்கின்றோம்.







உ
சிவ சிவ
கயிலைமாமுனிவர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி
முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்
அதிபர்
ஸ்ரீகாசிமடம், திருப்பனந்தாள் – 612 504
திருவிடைமருதூர் வட்டம், தஞ்சாவூர் மாவட்டம், தமிழ்நாடு.
தொலைபேசி : 0435–2456655.
Email:srikasimutt@gmail.com.

நாள் : 20-07-2021

## வாழ்த்துரை

தொல்காப்பியத்துள் தொடங்கி, பாட்டும் தொகையுமாய்த் துலங்கி, காப்பியங்களாய் விரிந்து, நீதி நூல்களாய் நுணுகி, பக்திப் பனுவல்களாய், திருமுறைகளாய் மலர்ந்து, நுண்பொருள் நுவலும் சாத்திரங்க்ளாய் மிளிர்ந்து வந்த தமிழ்ப் பெருங்கடலில், ஒப்பற்ற, உயர்வு பொருந்திய பக்திப் பரவசமூட்டுவனவாய் பொலிவுற்ற புராணங்களில் முழுமை பெற்ற முத்தாரங்களாய், எழிலார் இன்தமிழ் இலக்கியங்களாய்ப் பரந்தவை முப்பெரும் புராணங்கள், அவற்றுள் பொருளாலும், பாடல் எண்ணிக்கையாலும் செறிந்த சீர்மிகு செந்தமிழ் இலக்கியம் கந்தபுராணம் அதனை வடித்துத் தந்த தமிழ்மாமுனிவர் கச்சியப்ப சிவாசாரியார் தம் கவித்திறன், வரலாறு முதலானவற்றை விரித்துப் பேசும் தில்லை வாமதேவ முருகப்பட்டாரகர் யாத்திட்ட **ஸ்ரீகச்சியப்பசிவாசாரியார் புராணம்** - கூனம்பட்டி ஆதீனப்புலவர் சைவ.இராம. மாணிக்கவாசகன் அவர்களின் நுண்பொருள் உரையுடன் கள்ளக்குறிச்சி தில்லை. எஸ்.கார்த்திகேயசிவம் அவர்களால் பதிப்பித்து வெளியிடப் பெறுவது அறிய மகிழ்ச்சி.

மீயுயர் புகழ்மிக்க பாடுபொருள். அதன் உருவும் உள்ளடக்கமும் ஒப்பற்றவை, விரிந்து, பரந்த 171 பாடல்கள் அடங்கிய நற்றமிழ் நூல்; சுருங்கிய அளவில், பொருள் தெளிவு செய்யும் அழகு தமிழ் உரை - **ஆதிசைவர்கள் நலவாழ்வு மையம்** - தொடர்ந்து செய்து பழைய, சைவ நூல் பதிப்பு நிரலில் மேலும் ஓரெண் சேர்தல் - எனும் பன்முகச் சிறப்புடன் நூல் வெளிவந்து பல்லாயிரம் பக்தர்களுக்கு விருந்து தந்து பரவசமூட்டிடச் செந்திற்கந்தன் சேவடிகளைச் சிந்தித்து வாழ்த்துகிறோம்.

சுபம்.









ஸ்ரீ கைலாசபதி பூஜிதானாம் ஸ்ரீ வாதபுரீசபரம்பராகதானாம்
ஸ்ரீ மாணிக்க வாசக மூலாம்னாய பீட ப்ரஸ்தானாம்
67–வது குருமஹா சந்நிதானம்

'ஜகத்குரு'

**குரு ஸ்ரீமத். ராஜ. சரவண மாணிக்கவாசக குரு பரமாச்சார்ய சுவாமிகள்**

ஸ்ரீ சேனாம்பட்டு கல்யாணபுரி ஆதீனம்
பல்லவுண்டன்பாளையம் (அஞ்சல்) திருப்பூர் மாவட்டம் - 638 056. தமிழ்நாடு.

---

உ

*நமசிவாய வாழ்க*

## ஆசியுரை

நமது நல்லாசிக்கும், நன்மதிப்பிற்குமுரிய ஆதிசைவர்கள் நலவாழ்வு மையத்தின் நிறுவனர் தில்லை எஸ்.கார்த்திகேய தத்புருஷ சிவாச்சார்ய சுவாமிகட்கு சந்நிதானத்திலிருந்து எழுதிய ஆசீர்வாதம். நலம்.

மிகத் தொண்மையும், வரலாற்றுச் சிறப்பும் நிறைந்த ஸ்ரீகச்சியப்ப சிவாச்சார்ய சுவாமிகளின் புராணத்தை நல்உரையோடு மறுபதிப்பாக வெளியிடுவது அறிந்து மிக மகிழ்ந்தோம்.

மிக அரிய பிறவியான மானுடப்பிறவியில் மாசிலா மரபில் வந்த வள்ளலாக தவப்புதல்வர் என்ற சொல்லுக்கு உதாரணமாக விளங்கியவர், கச்சியப்பசிவாச்சாரியார். கோடிக்கணக்கான ஆன்மாக்களில் ஆண்டவனே விரும்பி இப்பூவுலகிற்கு அனுப்பி திருவிளையாடல்களை அவர்கள் வாயிலாக உலகிற்குச் சொல்வதைத் தானே துவக்கியும், திருத்தங்கள் செய்தும், ரசித்து அனுபவித்து ஏற்றதாக விளங்குவது கந்தபுராணமே. அவ்வரிய புத்தகத்தை சைவ சித்தாந்தத்திற்கு ஒப்பாகவே அருளி பெருமானது சரித்திரத்தை விரித்துரைத்த அப்பெரும் மகானான சுவாமிகள் பெருமானைத் தீண்டி பூஜிப்பவர்கள். என்றுமே, பலருக்கும் பலன் தரவல்லதாக தனது வாழ்க்கையை நடத்தினார்கள் என்பது நிரூபித்து வாழ்ந்து இன்றும் நம்மோடு வாழ்ந்து வரும் பெருமானின் புராணத்தை பற்பல அரிய பழைய நூல்களை பதிப்பித்து வரும்

உங்கள் பணியோடு நம் ஆதீன வித்வான். சிவத்திரு. இராம. மாணிக்கவாசகம் உரையெழுத வெளியிடுவது மிகுந்த பொருத்தமாகும். பாராட்டுக்கு உரியதுவுமாகும்.

இவ்வரிய பயனுள்ள பணியில் தன்னை ஆட்படுத்திக் கொண்ட அனைவருக்கும் குருவருளும் திருவருளும் என்றும் முன்னிற்கவும், சைவக்கொள்கை நிறைந்து வாழும் அனைவருக்கும் இந்நூல் வரப்பிரசாதமாக விளங்குவதால் அனைவரும் பெற்று குருவருள் பெற்றிடவும் வாழ்த்தி ஆசீர்வதிக்கிறோம்.





**VIKAS RATNA SIVASRI. K. PITCHAI GURUKKAL**

*Chief Priest, Sri Karpaga Vinayakar Temple,*
*Principal, Karpaga Vinayakar Veda Agama Vidhyalayam*
*Founder, Sivaneri Kazhakam*
*Secretary, Karpaga Vinayakar School,*
*Pillayarpatti – 630207 Sivaganga District, Tamilnadu, South India.*

உ

*ஸ்ரீ கற்பக விநாயகர் துணை*

## வாழ்த்துரை

"விதிபுலி நகர்த்தளி மேலைக் கோபுரத்து
அதிபுகழ் கீழ்முக மாக வேலவன்
பதிதர மேற்றிசை பார்த்து யிர்க்கெலாங்க
கதிதரு கற்பகக் களிற்றைப் போற்றுவோம்".

உலகம் உய்வதற்காக சிவபெருமானிடம் தோன்றியவர் முருகப்பெருமான் வேத ஆகமங்களினாலே அளக்க முடியாத முருகப்பெருமானின் பெருமையை "திகடசக்கரச் செம்முக மைந்துளான்" என்று அவராலே முதல்அடி எடுத்துக்கொடுத்து கந்தபுராணம் பாடிய பெருமைக்குரியவர் கச்சியப்ப சிவாசாரியார். ஆதிசைவ குலத்திற்கு பெருமை சேர்க்கும் வகையில் மணி மகுடமாக காஞ்சியில் தோன்றியவர் அவர். ஸ்ரீவாமதேவ முருக பட்டாரகர் எழுதிய இந்த கச்சியப்ப சிவாசாரியார் புராணம் ஒரு அரிய பொக்கிஷமாகும். ஏனென்றால் அநாதிசைவர், ஆதிசைவர் முதலிய சைவமரபைப் பற்றியும் தீட்சை பற்றியும் ஆதிசைவ கோத்திரம் பற்றியும் சைவத் திருக்கோயில் வழிபாடு பற்றியும் இந்நூலில் சிறப்பாக ஒரு ஆவணமாகக் கூறி இருக்கிறார். கச்சியப்ப சிவாசாரியாரின் வாழ்க்கையில் முருகப்பெருமான் அருள்புரிந்த விதத்தை ஸ்ரீமுருக பட்டாரகர் உள்ளம் உருகி கவிதை வடிவில் அமைத்திருக்கிறார். இது நாம் படித்துப் போற்றத்தக்கதாய் உள்ளது.

உரையாசிரியர் கூனம்பட்டி ஆதீனப்புலவர் உயர்திரு. இராம. மாணிக்கவாசகர் அவர்களின் ரத்தினச் சுருக்கமான அழகான உரை பாராட்டத்தக்கதாகும்.

*சமய சமுதாயப் பணிகளில் உள்ளன்புடன் ஈடுபட்டு பல சைவப் பணிகளை மேற்கொண்டு வரும் தில்லை சிவஸ்ரீ கார்த்திகேய சிவாசாரியார் அவர்கள் நூற்றாண்டுகளுக்கு மேற்பட்ட பல புத்தகங்களை வெளியிட்டு வருகிறார். அந்த வகையில் இந்நூல் பதிப்பிக்கப்பெறுவது பெரு மகிழ்ச்சியாகும். இதுபோன்ற நூல்கள் அடுத்தடுத்து வெளிவரவும், இச்சிறந்த பணியில் ஈடுபட்டுள்ள தில்லை சிவஸ்ரீ கார்த்திகேய சிவம் உள்ளிட்ட அனைவரும் எல்லா வளமும் பெறவும் எல்லாம்வல்ல ஸ்ரீகற்பக விநாயகப் பெருமான் திருவடிகளைப் பிரார்த்தித்து வாழ்த்துகிறோம்.*




அன்புடன்

K. Pitchai Gurukkal

K.பிச்சைக்குருக்கள்
பிள்ளையார்பட்டி

Ph.: 0091 (0)4577-264275, H/P:00919443362320 / 9842462320

website:www.pitchaianna.com/e-mail:pitchaianna@gmail.com

உ
Sivamayam
SIVAGAMA KALANITHI, SIVAGAMA CHELVAR,SAIVA SIDHDHANTHA SARABHAM
**A.V.SWAMINATHA SIVACHARIYAR**
FOUNDER & PRINCIPAL
SIVAPURAM VEDA SIVAGAMA PATASALAI, MAYILADUTHURAI
Agama Expert, State level committee, HR&CE.TN.Govt
No:32, Mayuranathar South Street, Mayiladuthurai, Tamilnadu, India- Pincode: 609001
email:avssivachariyar@yahoo.com website: www.sivapuramtrust.com



உ
*சிவமயம்*

## ஸ்ரீ கச்சியப்ப சிவாசாரியார் புராணம்
## சிறப்புப் பாயிரம்

எல்லாம்வல்ல உமையொருபாகன் திருவருளையும் குருவருளையும் சிந்தித்து மகிழ்கிறோம்.

ஸ்ரீ கச்சியப்பசிவாசாரியாரது புராணம் நீண்ட நாட்களுக்குப் பிறகு நம் கண்மணியிற் சிறந்த நன்மணிச்சீடராம் **சிவஸ்ரீ. தில்லை. எஸ்.கார்த்திகேயசிவம்** அவர்களால் **கள்ளக்குறிச்சி ஆதிசைவர்கள் நலவாழ்வு மையத்தின்** வெளியீடாக வருவது குறித்து பெரு மகிழ்ச்சியடைகிறோம். ஏனெனில் நூல்களின் வழியாகவே பரமன் நமக்கு வழிகாட்டியருளுகிறார். எப்படியோ வெனில், ஒரு விஷயத்தை இன்னதுதான் எனத்தீர்மானிக்க மூன்று அளவைகளை சித்தாந்தம் கூறும்.

அவையாவன: 1. நூலளவை, 2. காண்டல் அளவை, 3. கருதல் அளவை என்பதாம். கண்களால் கண்டு தீர்மானிப்பது காண்டல் அளவையெனப்படுவது. கருதல் அளவை என்பது ஒன்றினால் ஒன்றை அனுமானிப்பது. காட்சிகள் பொய்க்கும் என்பதாலும், இது இப்படியிருக்கலாம் எனத் தீர்மானிப்பது மாறுபாட்டுக் குரியதாம் என்பதாலும், நூல்களில் தக்கப் பிரமாணங்களுடன் அறுதியிட்டுக் கூறுவதை ஏற்பதே ஆன்றோர் துணிபு.

இனி, சைவத் தமிழுலகின் ப்ரஸ்தானத்ரயம் எனப் போற்றப்படும் பெரியபுராணம், கந்தபுராணம், திருவிளையாடற் புராணம் ஆகிய மூன்றும் மாக்கதைகளாகவும், வேதாகம ஞானத்தின் திறவுகோல்களாகவும் உள்ளன. பரஞானம் எனப்

போற்றப்படும் வேதங்களும் சிவாகமங்களும் வடமொழியில் அருளப்பட்டுள்ளன. இவற்றை இக்கால நவீன ஆராய்ச்சியாளர்கள் தத்தமது கொள்கைகளுக்கேற்பத் திரிப்பாராயினர். இதனால் பரஞான நூல்களின் உண்மைக்கருத்துக்கள் அடியார்களைச் சென்றடையாமல், குருசந்தான பரம்பரையில் இடைவெளி ஏற்படுத்திவருகிறது. இக்குறை நீங்க வேண்டுமோயெனில், தமிழ்வேதங்களை எல்லோருக்கும் புரியும்படியாகச்செய்தலே நலமாம்.

திருக்கோயில்கள் என்பன வழிபாட்டுத் தலங்களாக மட்டுமல்லாமல், புராணபடனஞ் செய்தும், செய்வித்தும் சமயச் செய்திகளைப் பரப்பும் மையங்கள் என்ற உண்மையை மேற்படி தமிழ்வேத நூலாசிரியர்களின் வரலாற்றையறியுங்கால், நாமும் அறியலாம். ஸ்ரீமத் சேக்கிழார்சுவாமிகள், ஸ்ரீமத் கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள், ஸ்ரீமத்பரஞ்சோதி முனிவர் சுவாமிகள் ஆகியோரது வரலாற்றையறிய முற்பட்டாலேயொழிய இதுகைக் கூடாதாம். ஆலயங்களில் வேதம் ஓதி ஆகமநெறிப் பூசனைகள் புரிந்து தோத்திரம்பாடி நடனமாடிக் கலைகளை வளர்த்த ஆன்றோர் சமூக சூழலே இப் பெருங்காப்பியங்களெழக் காரணமாயிருந்தது என்றது சத்தியமான விஷயம்.

இனி, பெரியபுராணமெனும் பெருங்காப்பியம், ஸ்ரீசுந்தர மூர்த்தி சுவாமிகளை காப்பியத் தலைவராகக் கொண்டு அருளப்பட்டுள்ளது. ஏனெனில், அவர் சிவபெருமானுடைய பிரதி பிம்பமாய்த் தோன்றியவர். எம்பிரானின் அணுக்கத் தொண்டு புரியும் பேறுபெற்றவர். தமதடியார்கள் புகழ் புவியில் பரவ வேணும் எனவும், திருத்தொண்டத் தொகையே மூலக் கருத்தாய் அமைய வேணும் எனவும், அதனைப் பாடியருள தமது மறுவுருவாம் சுந்தரனே தகுதியுடையோனெனும் கருத்தினராய், சுந்தரரை பார்வதியாரின் சேடிப் பெண்கள்மீது மனம் போக்கியவராக்கி அதுகாரணம் பற்றி அவரைத் தென்திசையில் ஆதி சைவக்குலத்துதிக்கச் செய்து, பின்னும் தாமே தடுத்தாட்கொண்டு ஆரூரில் திருத்தொண்டத் தொகைப் பாடியருள, **''தில்லை வாழந்தணர் தம் அடியார்க்கு மடியேன்''** எனத் தூமறைப்பாடும் வாயினால் தீந்தமிழ்ப் பாசுரத்திற்கு ஒரு முழுவடிவ அடியெடுத்துக் கொடுத்தருளுகிறார்.

அதாவது, சைவத்தின் அடித்தளமாகிய குரு லிங்க சங்கம வழிபாட்டின்கண், சங்கமமாகியவடியார் வழிபாடும் அவர்களது தோத்திரமும் தம்மையொத்ததாகப் பாவித்து அதற்கு அதிகார முடையோராகிய ஆதிசைவ குலத்துதிக்கச் செய்ததும், ஆதிசைவர்களின் ஆன்மார்த்த பரார்த்த பூஜைகளினதிகார நிர்ணயமும், தமிழும் சிவனடியார்களும் தம்மைப் போன்றே பூசிக்கப்பட வேண்டியதன் மாண்பினையும் திருவுள்ளமாகக் கொண்டருளிய பெருங்கருணைத் தடங்கடலாகிய பெருமானின் திருக்குறிப்புணர்ந்து ஸ்ரீமத் சேக்கிழார்சுவாமிகள் சுந்தரரை இவ்வாறு காப்பியத் தலைவராகக் கொண்டியற்றினார் என்பது கரதலாமலகமாம்.

**"மாதவம் செய்த தென்திசை வாழ்ந்திடத்**
**தீதிலாத் திருத்தொண்டத் தொகை தரப்**
**போதுவார் அவர்மேல் மனம் போக்கிடக்**
**காதல் மாதரும் காட்சியில் கண்ணினார்".**

என்பது சேக்கிழார் திருவாக்காகும். இப்படியாகக் கந்தபுராண மருளிய ஸ்ரீமத் கச்சியப்பசிவாசாரிய சுவாமிகளைக் காப்பியத் தலைவராகக் கொண்டு ஸ்ரீமத் வாமதேவ முருகப்பட்டாரகர் என்பார் புராணம் பாடியருளினார் என்றால் அதனுட் கருத்து இக்காலத்தில் ஆதிசைவருட்பட எல்லோரும் அறியத்தக்கதாம்.

ஏனெனில் பதினெண் புராணங்களிலொன்றதாகிய ஸ்ரீமத் ஸ்காந்த புராணம் குமரக்கடவுள் சூரபதுமனை வதம் செய்த வரலாற்றினை மட்டும் கூறாது இன்னும் பிறசெய்திகளையும் மிகுதியாய்க் கூறுதலாலும், தேவர் சிறை மீட்ட கந்தக் கடவுளின் மாக்கதைத் தீந்தமிழில் புராணமாக சைவத்தமிழுலகிற்கருளிச் செய்திடல் வேணுமெனும் சிவபிரானாரின் திருவுளக் குறிப்பினாலும் ஏற்பட்டதன்றோ!

புராணமாவது ஐந்தாம் வேதமென்பதால் அதனைத் தமிழில் அருளிச் செய்வோர் தக்கவராயிருத்தல் அவசியம். குமரக் கடவுளின் வரலாறாதலால் கந்தோபாசனையுள்ளவராயும், வேதாகம புராண இதிகாசாதிகளிலும், தமிழ்வேதமாகிய திருமுறைகளிலும் பக்திமையும் பாண்டித்யமும் ஒருங்கேயுடையவரே கந்தபுராண மியற்றிடத் தகுதியுடையோர் எனத் திருவுளங் கொள்ளுங்கால்

சிவபிரானாரது திருவுள்ளத்தில் காஞ்சிக் குமரக்கோட்டத்துப் பூஜாதிகாரமுடையோராகிய கச்சியப்பர் என்பார் தோன்றியது பரஞானச் செய்தியேயாம்!

காஞ்சிக் குமரக்கோட்டத்து கந்தக்கடவுளைத் திருமேனி தீண்டியர்ச்சிக்கும் மரபில் வந்த ஸ்ரீமத் காளத்தியப்ப சிவாசாரியார் சத்புத்திரர் வேண்டி தவமிருந்தார் என இப்புராணம் கூறுகிறது.

இனி; புராணம் என்பது ஐந்துவகை இலக்கண முடையதா யிருக்க வேணும் என்பது விதி.

**"ஸர்க்கஸ்ச ப்ரதிஸர்க்கஸ்ச வம்சோ மன்வந்தராணிச ।**
**வம்சானுசரிதம் சைவபுராணம் பஞ்சலக்ஷணம் ॥"**

என்பது சாத்திரம். பெரியபுராணத்தில் தில்லைவாழந்தணர் சருக்கம் என்ற தலைப்பில் மற்றைய நாயன்மார்களின் கதைகள் தனித்தனியே சிந்திக்கப்படுவது பிரதி சருக்கம் எனக் கொள்வது போல ஸர்க்கம் (பாகம்) பிரதிஸர்க்கம் (அத்தியாயம்) நாட்டுச் சிறப்பு திருநகரச் சிறப்பு, அந்நாட்டின் அரச பரம்பரையும் அவர்களது வரலாற்றுக் குறிப்புகளும் கூறும் வம்சம், அக்கதை நிகழும் காலத்தையறியுமாறு மனவந்தரம் யுகம் வருடம் ஆகிய விபரம் கூறும் மன்வந்திரம், அப்புராணத்தையெளிதில் புரியச் செய்யும் கிளைக் கதைகளாகிய வம்சானுசரிதம் என்பனவாகிய ஐந்தும் ஒரு முழுமையான புராணத்தின் அங்கங்களாமெனத் தெரிந்து மகிழ்க.

இப்படிப்பட்ட புராணங்களே மகாபுராணமெனப் போற்றப் படுதலால், பதினெண் புராணங்களுக்கு இணையாகத் தமிழில்வரு புராணங்களையருளியோர் பெருங்கடவுட் திருவருளல்லாது அமையாதென ஓர்க. இப்படிப் புராண கர்த்தாக் களைப் பிறப்பிக்கச் செய்யுமாறு இறைவனிச்சை வெளிப் பாட்டையே அவதாரம் எனும் சொல் குறிக்கின்றது. இப்படி யவதரித்துப் புராணம் பண்ணியவர்களைத்தான் பின்வந்த ஆன்றோர்கள் தனிப்புராணங்களால் போற்றியருளுவார்கள். பெரிய புராண மருளிய ஸ்ரீமத் சேக்கிழார் சுவாமிகளுக்குத் தனிப் புராணமும் பிள்ளைத்தமிழ் போன்ற பாக்களும் அமைந்திருப்ப தாலேயே பெரிய புராணத்தின் மகத்துவத்தை யுலகறியச் செய்யமுடிகிறது.

இவ்வாறாகக் கந்தக்கடவுளின் திருவவதாரம் சூரபதுமவதம், வள்ளி தெய்வயானை மணம் எனும் மாக்கதையைப் புராணம் கூறவேண்டிய இலக்கணத்துடன் ஆக்கியருளியதை ஸ்ரீமத்கச்சியப்ப சிவாசாரியார் புராணமருளிய ஸ்ரீமத்வாமதேவமுருகப்பட்டாரகர் அவர்களருளியவாறு;

**"காப்பொடு கடவுள் வாழ்த்துக் கருதவையடக்க மாற்றுக்**
**கோப்பமை படல நாட்டுக் குறைவறு படலமென்று**
**நீப்பரு நகர மேன்மை நிலவுமப் படல மான்றோர்**
**பாப்புகழ் பாயிரத்தின் படல மென்றாக்கிப் பின்னர்"**

**"காண்டகு முற்பவ காண்ட மாசுர**
**நீண்ட மாகேந்திர நிலையவுத்தமா**
**மாண்ட குதைவிக மருவு தக்கநற்**
**காண்ட மென்றிவ்வறு காண்ட மாக்கியே".**

என்ற இவ்விருபாக்கள் வாயிலாக காப்பு கடவுள் வாழ்த்து, அவையடக்கம், ஆற்றுப்படலம், நாட்டுப்படம், நகரப்படலம், பாயிரப்படலம் எனமுறையான் கூறிப்பின், உற்பத்திக் காண்டம், அசுரகாண்டம், மகேந்திரகாண்டம், யுத்தகாண்டம், தேவகாண்டம், தக்ஷகாண்டம் என ஆறுகாண்டங்களாக (ஸர்க்கங்களாக)வும், ஒவ்வொரு காண்டத்தின் உட்படலங்களாக காப்பியத் தலைவனின் பரம்பரை, மனுக்கள் யுகங்கள் இந்திராதி தேவர்களின் பதவிகள், தக்ஷயாகம் முதலிய சிவோத்கிருஷ்டமான கிளைக்கதைகள் எனப்பத்தாயிரத்து முன்னூற்று நாற்பத்தியாறு பாக்களாக அருளியுள்ளதை எண்ணிட நன்னெஞ்சு விம்மித்ததும்புமாம்.

இப்படிக்கொத்த ஸ்ரீமத் சிவாசாரிய சுவாமிகளுக்குப் புராணம் பாடியருளல் அவசியமென்றல்லவோ சிவபிரானார் ஸ்ரீமத் வாமதேவ முருகப்பட்டாரகரைப் படைத்தருளியுள்ளார்!

இனி; ஸ்ரீமத்வாமதேவ முருகபட்டாரகரருளிய ஸ்ரீகச்சியப்ப சிவாசாரியார் புராணமாவது அளவிற்சிறிதாயினும், எல்லா லக்ஷணங்களுடன் கூடிய சிவாகம ஸாரமான ஓர் புராண நூலாகவே அறியப்படுகிறது. இதனைப் படித்தால் பிற புராணங்களைப் படிக்கக்கூடிய ஆற்றலும் விருப்பமும் ஒருங்கே மனதில் தோன்றும் என்பதில் ஐயமில்லை. ஸ்ரீமத் கச்சியப்ப சிவாசாரியார் புராணம் கூற முற்படுமுகத்தான் பெரியபுராணம், திருவிளையாடற்புராணம்,

கந்தபுராணம் ஆகியவற்றின் சாராம்சங்களையும், சிவாகமக் குறிப்புக்களையும் தெவிட்டாத இன்பமாய் ஆக்கித்தந்துள்ளார்.

முதற்கண், நாட்டுச் சிறப்புக் கூறுமிடத்து "தொண்டை நாடு சான்றோருடைத்து" எனும் ஔவைப் பிராட்டியாரின் குறிப்பையே கூறி, சான்றோருடைத்து என்றதற்கான விளக்கமாய்,

**"சேக்கிழார் கலியனார் திருக் குறிப்பினார்**
**மேக்குறு பூசலார் விழையும் வாயிலார்**
**தேக்குமை யடிகளார் திகழு மூர்க்கனார்**
**ஆக்கமோடு உதித்தருளடைந்த நாடிதால்"**

என்ற பாடலின் மூலம் உணர்த்தியருளுகிறார். மேலும் கச்சியப்பர் உதித்தது ஆதிசைவர்மரபு என்றதால் அம்மரபைப் பற்றிப் பதினொருப் பாக்களின் வாயிலாக புகழ் கூறியிருப்பது உளங் கசிந்துருகச் செய்வதாம். ஆதிசைவர் பெருமை கூறுமிவ் வமைப்பினை வேறெந்த நூலிலும் இதுகாறும் கண்டிலோம் எனில் மிகையில்லை.

**"கடவுளர் களிலுயர்ந்தவர் சிவபெருமான்**
**முன்னை நூல்களிற் சிறந்தது சைவாகமங்கள்**
**மந்திரங் களிலுயர்ந்தது ஸ்ரீபஞ்சாக்ஷரம்**
**குலங்களுள் உயர்ந்தது ஆதிசைவர்"**

என அறுதியிட்டுக் கூறுமிவ்விஷயம் இனி, சிவாகம நூலொப்புதலுடன் சிந்திப்பதுநலம்.

## ஸ்ரீமத்காரணாகமம் நித்யார்ச்சனவிதி படலம்

**1. ஆத்மார்த்தம்ச பரார்த்தம்ச ஆதிசைவேன பூஜிதம் ।**
**ஆதிசைவ இதிப்ரோக்தா: ஸ சிவப்ராம்மணோ குரு: ॥**

ஆத்மார்த்தம் பரார்த்தம் எனும் இருவித பூஜைகளும் செய்யத் தகுதியுடையோர் ஆதி சைவரேயாவர். ஆதிசைவர் என்போர் சிவப்ராம்மணர் ஆவர்.

**2. சதுர்வேதாதிகாரத்வாத் சைவசித்தாந்த பாரக: ।**
**சாதுர்வர்ணாதிகாரத்வாத் ஆதிசைவ இதி ஸ்ம்ருதா: ॥**

நான்கு வேதங்களையும் ஓதத் தகுதியுடையாராயும், சைவ சித்தாந்தமெனும் சிவாகம ஞானமுடையோராயும், நான்கு

வருணத்தாருக்கும் தீக்கை முதலியன செய்விக்கும் தகுதியுடையோ ராயும் உள்ளவர்களாதலால் ஆதிசைவர் எனப்பெயர்பெற்றார்கள்.

3. **கௌசிக: காச்யபஸ் சைவ பாரத்வாஜோத கௌதம:**
**அகஸ்த்யஸ்சைவ பஞ்சைதே பஞ்சவக்த்ரேஷு தீக்ஷிதா:**

*ஈசானம் தத்புருஷம் அகோரம் வாமதேவம் ஸத்யோஜாதம் ஆகிய சிவபெருமானது ஐந்து முகங்களிலிருந்தும் தோன்றிய கௌசிகர், காசியபர், பாரத்வாஜர், கௌதமர், அகஸ்த்யர் ஆகிய ஐந்து ரிஷிகளும் பெருமானது ஐந்துமுகங்களினாலும் தீக்ஷை செய்விக்கப்பட்டார்கள்.*

4. **ஏஷாம் வம்சேஷு ஸஞ்ஜாதா: சிவப்ராம்மண நாமகா:**

*மேற்படி ஐந்துரிஷிகளின் குலத்துதித்தவர்களே சிவ ப்ராம்மணர்களெனும் ஆதிசைவராவர். இப்படியான சிவாகம ப்ரமாணங்களைத் தமது பாக்களில் பதிவித்து ஆதிசைவகுலப் பெருமையைக் கூறுமுகத்தான்;*

**"அடைதரும் அநாதி சைவராகிய சதேசமூர்த்தி**
**உடைய சத்தியோசாதம் சீருறு வாமதேவம் மேன்மை**
**படை அகோர த்தினொடு பகரும் தற்புருடம் உச்சி**
**இடையமர் ஈசானம் என்றியம்பும் ஐம்முகங்கணின்றும்"**

**"தீத்திறனறத் தோன்றும் கோசிகன் எழில் காசிபன் சீர்**
**முத்திடு பரத்துவாசன் மொழி கௌதமன் மெய்ம்மேன்மை**
**யேத்திய குறுமெய்யோகன் எனும் இவ்மிவைந்து இருடியோர்தம்**
**கோத்திரமிந்தத் தெய்வ குலத்தின் கோத்திரமால்"**

*என இருபாடல்கள் வாயிலாய் உணர்த்தியருளியது வியந்து போற்றத் தக்கதாம். (குருமெய்யோகன் = அகத்தியர்) பின்னும் வாதுளாகமம் கூறும் ஏழுசைவர்களின் முறைமையை,*

**"அகரமுனநாதிசைவம் ஆதிசைவத்தினோடு**
**மகாசைவமனுசைவஞ்சீர் மருவுஅவாந்தரசைவம் பின்**
**தொகாத பிரவரசைவம் தொடரும் அந்தியசைவம் என்று,**
**இகாதமெய்யிவ்வேழ்சைவத்தின் இரண்டாம் சைவமீதால்"**

*என அநாதி சைவனாகிய சிவபிரானார்க்கு அடுத்த இரண்டாம் சைவர் ஆதிசைவர் என்றியம்புகிறார்.*

மேலும் சிவபெருமானால் தில்லைவாழந்தணர் என அடியெடுத்துக் கொடுத்தருளப்பட்ட ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள், சடையனார் இசைஞானியார், முப்போதும் திருமேனி தீண்டுவார், சடங்கவியார், புகழ்த்துணையார், சிவகோசரியார், பிரமசம்பு, சர்வாத்மசம்பு, நம்பியாண்டார்நம்பி, அருணந்திசிவம், நீலகண்ட சிவாசாரியார், சோமசம்பு, அகோரசிவாசாரியார், திரிலோசன சிவாசாரியார், என நாயன்மார்களும், சந்தானக் குரவர்களும், சிவாகம பத்ததி ஆசாரியர்களும் தோன்றிய பெருமைமிகு ஆதிசைவகுலம் எனவோர் அற்புதப் பட்டியலைத் தருகின்றார். விரிவாய் இதனைச் சிந்திக்க முற்படுதலேனோ? என வையம் பிறக்குமேயாகில்; நன்று,

'தற்கால நவீனவாராய்ச் சியாளர்க் கீதாம்'

இப்படியாகப் புராணவிலக்கணங்களுடன் ஸ்ரீமத்கச்சியப்ப சிவாசாரியார் வரலாறு பரமனார் திருவுளக் குறிப்பில் தோன்றி இக்காலத்தில் மீள்பதிப்பாய் வருமோயெனின் சிவபரம் பொருளின் கருணா விலாசமன்றி மற்றொன்றன்று.

ஸ்ரீமத் கச்சியப்ப சிவாசாரியாருக்குக் கனவில் தோன்றி கந்தபுராணம் பாடுக என்றும், 'திகடசக்கரம்' என அடியெடுத்துக் கொடுத்து, அச்சொல் திகழ்+தசக்கரம் எனப் பிரியும் என்றருள, அவ்வடியிலே துவங்கப்பட்ட கந்தபுராணம் முற்றுப்பெற்று அரங்கேற்றங் காணும் வேளையில் இச்சொல் சர்ச்சையாக, கந்தக் கடவுளே சோழதேசத்துப் புலவராயத் தோண்றி வீரசோழியம் எனும் இலக்கணநூல் ஆதாரம்காட்டியுரைத்து எல்லோர்க்கு மருள்செய்து அரங்கேற்றம் நிகழ்த்தியருளிய புராணத்தை இந்நூலில் படித்து சுவைப்பதே முழுமைதரும் என்பதாலும், விரிவஞ்சியும் விடுகிறோம்.

''சிந்தையுள் தெளிவுமாகித் தெளிவினுள் சிவமுமாகி'' என்பார் நாவரசர். அவ்வாறு சிவசிந்தையுடையோரால் ஆக்கப் பட்டப் புராணங்களைப் படனஞ் செய்தும் செய்வித்தும் வந்தால் சிந்தைத் தெளிந்து ஏகாக்கிர சித்தமாய மகிழ்வுடன் வாழலாம் என்பது இந்நூலைப் பயிலுவோர்க்கு விளங்கும்.

புராண கர்த்தாக்கள், புராணஞ் சொல்லுவோர்கள் இவர்களை இப்படியாக் கௌரவிக்க வேணும் என்பதை கச்சியப்ப

சிவாசாரியாரைச் சிவிகையேற்றி வலம்வரு பகுதியினால் உணர்ந்து யாவரும் அவ்வாறு பழகுதலை அவசியமாக் கொள்ளுதல் வேண்டும்.

இனி; இந் நூலையாக்கியருளிய ஸ்ரீமத் வாமதேவ முருக பட்டாரகரைப் போற்றுவோம். 'பட்டாரக' என்றால் நல்லொழுக்கமும் மேலானஞானமும் உடைய அந்தணர் என்று நிகண்டு கூறுகிறது. அவ்வாறு இன்று நம்மிடையே வாழும் ஆதி சைவக்குலத் தோன்றல் தில்லை. எஸ். கார்த்திகேய சிவம் அவர்கள் முன்பு இதுபோல் அரிதான பல நூல்களை வெளியிட்டு சைவ உலகிற்குத் தொண்டாற்றுவார்போல், இந்நூலையும் சிறப்புற அமைத்து வெளியிட்டும், இப்பணியைத் தொடர அவருக்கு சகல க்ஷேமங்களையும் உமையொருபாகன் அருளிச் செய்யப் பிரார்த்தித்து வாழ்த்தி மகிழ்கிறோம்.

இங்ஙனம்

ஏ.வி.சுவாமிநாத சிவாசாரியார்,

மயிலாடுதுறை.






உ
சிவமயம்
'சிவாகரத்னா', 'வ்யாகரணசிரோமணி'
சிவஸ்ரீ M.N.கல்யாணசுந்தர சிவாச்சாரியார்,M.A.,
வேதஆகம அகாடமி டிரஸ்ட்,
எண்.23, மேற்கு உள்வீதி,
மலைவாசல், திருச்சிராப்பள்ளி-620 002.

## வாழ்த்துரை

**ஒப்பறு சூர்முத லுடலங் கீறிய
மெய்ப்படு வேற்படை வீரன் மாக்கதை
தப்பறு தமிழினாற் றந்த சீர்க்கச்சி
யப்பசற் குருபதம் அகத்துப்போற்றுவாம்.**

எல்லாம்வல்ல மாதொருபாகனின் திருவருளாலும் குருவருளாலும் ஸ்ரீமத் வாமதேவ முருகபட்டாரகரால் இயற்றப்பட்ட ஸ்ரீ கச்சியப்பர் புராணம் ஆதிசைவர்கள் நலவாழ்வு மையம் சார்பாக தில்லைக்கூத்தபிரான் திருவடியை நித்தம் சித்தத்தில் கொண்ட ஆதிசைவப் பெருந்தகை தில்லை சிவஸ்ரீ கு.கார்த்திகேய சிவம் அவர்களின் பெருமுயற்சியால் மீள் பதிவாக வெளிவருவது சைவ நல்லுலகம் பெற்ற பெரும் பேறாகும்.

நமது பாரததேசத்தில் எண்ணிலடங்கா ஞானியர்களும் அருளாலர்களும் அவ்வப்போது தோன்றி ஆன்மீக நெறியினை போதித்து மனிதர்களைப் புனிதர்களாய் மாற்றி எண்ணற்ற சாதனைகள் புரிந்துள்ளனர். அந்த அமைப்பில் காஞ்சி நகரானது மனிதர்களுக்கு மோக்ஷத்தை அருளக்கூடிய ஏழு நகரில் ஒன்றாகவும் ஆன்மீகம் செழித்தோங்கும் திவ்ய க்ஷேத்திரமாக பன்னெடுங் காலமாக விளங்கிவருகிறது. "கல்வியைக் கரையிலாத காஞ்சி மாநகர்" என்று அப்பர் தேவாரத்தில் புகழப்படும் இத்தலம் பண்டைக் காலத்தில் கல்விக்கு இருப்பிடமாக விளங்கிக் 'கடிகா ஸ்தானத்தை'யும், புகழ்பெற்ற அறிஞர்களையும் பெற்றிருந்தது.

காஞ்சிபுரம் கோயில்கள் மலிந்த நகரம். எப்போதும் விழாக்கள்மலிந்து விளங்கும் நகரமாதலின் 'விழவறாக் காஞ்சி' என்று புகழப்படும் பெருமை பெற்றது. பெரும்பாணாற்றுப்படை, தண்டியலங்காரம் முதலிய நூல்கள் இத்தலத்தின் புகழைப் பாடுகின்றன.

இவ்வாறு கற்றளிகளால் இறைவனுக்கு முன்னோர்கள் பலர் ஆலயங்களை எழுப்பி பக்திமணம் கமழச்செய்து ஆன்மாக்களுக்கு உய்வை அளித்தனர். அதேபோன்று சான்றோர்கள் நிறைந்த காஞ்சி நகரத்திலே சைவமும் வைணவமும் கோலோச்சியது. சாத்திரங்கள் தேர்ந்த வல்லுனர்கள் இறையருளால் மனிதர்கள் ஆன்மீகத் தெளிவு புனித நூல்களை எழுதி மேலும் பெருமை சேர்த்தனர். இவையனைத்தும் வேதநெறிகளையும் சிவாகம மரபுகளையும் புராணங்களையும் அடியொற்றி அமையப்பெற்றன.

திருமுருகாற்றுப்படை பரிபாடல் முதலிய சங்க இலக்கிய தமிழ் நூல்கள் இறைவனைப் பாடும்போது தலச்சார்புகாட்டி அதன் புகழ் கூறலையும் தருகின்றன. இப்படி காவியங்கள் பல பெருமக்கள் அருளினாலும் ஆதிசைவ மரபில் தோன்றி இறைவனால் ஓலை கொடுத்து நல்ல நூலையும் தந்து சைவ இலக்கியத்தின் ஆணிவேராக திகழ்ந்தனர். தம்பிரான் தோழராகத் தோன்றி திருத்தொண்டர் தொகைப்பாடியருளிய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள். சைவசித்தாந்த நூல்களில் எட்டு நூல்களைத் தந்தருளிய கொற்றவன்குடி ஸ்ரீஉபாபதி சிவாச்சாரியார். "திகடசக்கரமென" முருகப்பெருமானே அடியெடுத்துக் கொடுத்து சிந்தைக்கினிய கந்தபுராணம் நல்கிய ஸ்ரீகச்சியப்ப சிவாச்சாரியார். இம்மூவருமே இறையருளுக்கு பாத்திரமாகி விளங்கிய பேரருளாளர்கள்.

ஸ்ரீகச்சியப்ப சிவாசாரிய ஸ்வாமிகள் இயற்றிய கந்தபுராண மானது வடமொழி ஸ்காந்தத்தை மூலமாக உடைய புராணம்.

**புராண இலக்கணம் :** எழுத்திற்கும், சொல்லிற்கும், பொருளிற்கும் இலக்கணம் கண்ட நூலோர், அவர்தாம் இயற்றிய புராண நூல்களுக்கும் இலக்கணம் கூறியுள்ளனர். தொல்காப்பியம், தண்டியலங்காரம், வெண்பாப்பாட்டியல், சிதம்பரப் பாட்டியல், திவாகர நிகண்டு ஆகிய நூல்கள் புராணத்திற்கான இலக்கணத்தைக் கூறுகின்றன.

"குலவரவு காரிகை யாப்பிற் புராணமே" என்ற தொடர் பெருங்காப்பியம், சிறுகாப்பியம், புராணம் இம்மூன்றையும் ஒன்றாகவே மதிக்கிறது. இக்கூற்றுப்படி பாடப்படும் பொருளில் பெருங்காப்பிய புராண வேறுபாடு தோன்றவில்லை.

கந்தபுராணத்தை உற்று நோக்குகையில் ஸ்ரீகச்சியப்ப சிவாசாரிய ஸ்வாமிகளின் நுண்மாண் நுழைபுலத்தினை வெளிப் படுத்துகின்றது. இவரது 'சிந்தனைக் களஞ்சியம்' படிப்பவர் சிந்தனையைத் தூண்ட வழிவகுப்பது, பல்சுவையும் மிக்கது.

கனிச்சுவை மிக்கது; நவில்தொறும் நவில்தொறும் நா நயம் பயப்பது; பயில்தொறும் அறுமுகக் கடவுள் மேல் பக்தி ஞானம் விளைப்பது. இதில் சொல்லப்படாத கிளைக் கதைகள் இல்லை; இதை 'புதுமயிலூர்பரன் புராணத்துற்றிடாக் கதையிலை' என்னும் செய்யுட் பகுதியால் அறியலாம். கிரந்தத் தொகை, கதைப் பரப்பு, அரும் பொருட்கிடக்கை, பொருள் ஆழம் என்பவைகளால் மற்றவற்றைச் விடச் சிறந்து விளங்குகிறது.

உலக மக்கள் ஓவியரைவிட ஓவியத்தையே நினைவில் கொள்வது இயல்பு. கந்தபுராண காவியத்தின் மேல் பக்தி கொண்டவர்கள் 10345 பாடல்கள் அருளிய கச்சியப்ப சிவாசாரிய ஸ்வாமிகளை மனதில் கொள்வதுமில்லை, கொண்டாடுவது மில்லை. ஆனால் ஸ்ரீமத் வாமதேவ முருக பட்டாரகர் கச்சியப்ப சிவாசாரிய ஸ்வாமிகளைப் பற்றி கச்சியப்ப புராணம் பாடியருளி உலகிற்கு ஸமர்ப்பணம் செய்தனர்.

ஒருவருடைய சால்பு என்பது அவர் வாழ்க்கைப் பற்றி கொண்டிருக்கும் நோக்கையும், வாழும் முறையையும் அவை சமுதாயத்துக்குப் பயன்படுமாற்றையும் அடிப்படையாகக் கொண்டே மதிப்பிடற்பாலதாகும். வாழ்க்கையின் நோக்கம் சமுதாயத்துக்குப் பயன்படுவதே என்ற கோட்பாட்டினைத் தானும் வாழந்து, பிறர்வாழ வழிகாட்டியும் நிற்கும் ஒருவரே சால்புடையவராக - சான்றோராக - மதிக்கப்படுகிறார். இத்தகை யோரே வரலாற்றை உருவாக்குகின்றனர். இவர்களே 'உடையும் பாட்டும் உடையோராகி' வரலாறும் ஆகின்றனர்.

ஆதிசைவ மரபில் வந்துதித்த கச்சியப்ப சிவாசாரியார் புகழ்பாடும் இந்நூல் பல ஆண்டுகளுக்கு பிறகு மீள்பதிவு செய்து குருமரபினை நிலைநாட்டிவரும் எமது பேரன்புக்குரிய தில்லை கு கார்த்திகேய சிவம் அவர்களின் இச்சேவை பாராட்டுக்குரியது. இப்புத்தகத்தை அன்பர்கள் வாங்கி படித்து குருவருள் பெற்றுய்ய ப்ரார்த்திக்கின்றோம். அன்னாரது சிவப்பணியானது மேலும் சிறந்தோங்க எல்லாம் வல்ல ஸ்ரீசுகந்த குந்தளாம்பிகா ஸமேத ஸ்ரீகல்யாண மாத்ருபூதேஸ்வரப் பெருமானின் திருவடிகளைப் போற்றுகிறோம்.

**"மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகமெலாம்".**



உ
சிவமயம்
ஸ்ரீ மாணிக்கவாசகர் துணை



98655-44592

சைவ சமயமே சமயம்,
சிவபெருமானே பரம்பொருள், திருநீறே உயர்ந்த செல்வம்
கொல்லாவிரதம் எல்லாவிரதத்திலும் சிறந்தது

**முத்தமிழ்ச் சைவ மாமணி சு. இராமலிங்க சுவாமிகள்**
(சீகம்பட்டியார்)
**சித்தாந்தச் சைவச் செம்மணி கணித சோதிடர்**
**சைவ சமய விரிவுரையாளர்**
"ஸ்ரீ மாணிக்கவாசகர் சோதிட நிலையம்" குளித்தலை, கரூர் மாவட்டம்.


*ஸ்ரீ சிவகாமசுந்தரி சமேத சிதம்பரேஸ்வரர் துணை*

## வாழ்த்துரை

ஸ்ரீகச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள் துதி

"ஆகம ஞானசாரம் அறுமுக னருளாற் பெற்று
மாகரும்வியக்கும் வண்ணம் மாபெரும் புராணஞ் செய்தான்
ஏகமா மரத்தின் கீழே யிருந்தரு ளிறைவ னூரில்
சாகரம் கச்சியப்பரின் தாளிணை போற்றி செய்வாம்".

சிவபெருமான் அருளிச்செய்த வேத சிவாகமத்தை முதனூரலாக உடையது சைவசமயம். அதனால் சமயங்கட் கெல்லாம் மிக உயர்ந்தது சைவசமயம். வேதாகமங்களின் சாரமாக விளங்குவது. திருமுறைகளும் மெய்கண்ட நூல்களும் புராணங்களும். மகா விஷ்ணுவின் அம்சமாகிய வேதவியாசர் வடமொழியிலே பதினெட்டு புராணம், அதில் ஸ்காந்தம் என்கிற புராணத்தில் சங்கர சங்கிதையில் சிவரகசியத்தில் உள்ளது முருகப்பெருமான் பெருமை.

தமிழ்நாடு செய்த தவத்தினால் பிருதிவித்தலமாகிய காஞ்சிபுரத்து ஆதிசைவகுல சிகாமணியாக விளங்கிய கச்சியப்ப சிவாசாரியரு டைய கனவில் முருகப்பெருமான் எழுந்தருளி நம்முடைய சிறப்பை ஸ்காந்தத்தில் உள்ளபடி 'தமிழ் மொழியிலே பாடுவாயாக' என்று 'திகடசக்கர' என்ற முதல் வாக்கியத்தை அருளிச்செய்து மறைந்தருளினார்.

வேதாகம உபநிடத தோத்திர சாத்திரக் கடலாக விளங்கிய கச்சியப்பர் முருகப்பெருமான் அருளை நினைந்து ஆனந்தமடைந்து ஆறுகாண்டங்களாக பத்தாயிரத்து முந்நூற்று நாற்பத்தைந்து பாடலாகப் பாடி குமரகோட்டத்தில் அரங்கேற்றம் செய்தருளினார்.

புராணம் பாடிய புலவர்கள் எல்லாருக்கும் மேலாக ஒப்பற்ற அருட்புலவர் கச்சியப்பசிவாசாரிய சுவாமிகள். பரம்பரையில் செய்த தவம், தாய் தந்தை செய்த தவம், முற்பிறப்பிலும் இப்பிறப்பிலும்

செய்த தவம், முருகப் பெருமான் அருள், சிவநூல்களை கற்ற ஞானம் எல்லாம் ஒன்று சேர்ந்து கச்சியப்பர் மூலமாக கந்தபுராணம் என்கிற சிவபுராணம், சைவ சமயத்திற்கு கிடைத்தது.

பதி பசு பாச இலக்கணம், சரியை கிரியை யோகம் ஞானம், அறம் பொருள் இன்பம் வீடு, உலகியல் அரசியல், சிவபரத்துவம் ஞானோபதேசம் ஆகிய சிறந்த பொருள்கள் மலிந்துள்ளது கந்தபுராணம். இதற்கு சமானமான புராணம் வேறு கிடையாது. கச்சியப்பர் தோத்திரம் 51 பாடல் பாடியுள்ளேன். அதிலே ஒரு பாடல்:

"புராணஞ் சொன்னவர்கள் பலபே ருண்டு
புண்ணியனே உன்போலச் சொன்னா ரில்லை
பராபரன் சிவனேகாண் பதிதா னென்றும்
பங்கயன்மால் முதலானோர் பசுக்க ளென்றும்
திரமான வேதவா கமப் பொருளை
தெளிவாக எமக்கருளிச் செய்தாய் நல்ல
வரமான கச்சிநகர்க் கச்சி யப்ப
மாதவனே நின்னடிகள் போற்றி போற்றி".

- என்பது கண்டு கொள்க.

சிவனருட் புலவராகிய கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள் வரலாற்றை திருக்கயிலாய பரம்பரை மறைஞான சம்பந்த சைவாசாரிய மரபினருள் ஒருவரான சிதம்பரம் - வாமதேவ முருக பட்டாரகர் என்ற அருட்புலவர் சிறப்பாக பாடியுள்ளார். பாடல் 171 அதற்கு எனது சற்புத்திரரும், கூனம்பட்டி கல்யாணபுரி மாணிக்கவாசகர் ஆதீனப் புலவரும் திருச்சிராப்பள்ளி தேசியக் கல்லூரி தமிழ்ப் புலவர் இராம. மாணிக்கவாசகன் சிறப்பான பொழிப்புரை எழுதியுள்ளார்.

நூறு ஆண்டுகளுக்குப் பிறகு இவ்வரிய நூலை ஆதிசைவர் நலவாழ்வு மைய நிறுவனர் ஆகம புராண இதிகாசங்களில் மிகுந்த ஈடுபாடு கொண்ட தில்லை எஸ்.கார்த்திகேய சிவம் அவர்கள் பதிப்பித்து வெளியிடுகின்றார். இது சைவ உலகிற்கு ஒரு அருட்கொடை ஆகும்.

சிவநேய மிகுந்த அன்பர்கள் கற்று உணர்ந்து சிவனருளைப் பெறுவீர்களாக. திருச்சிற்றம்பலம்.

அன்புள்ள,
திருமுறை சைவ சி. இராமலிங்கம்.
சேலம்.



நமசிவாய வாழ்க.
திருச்சிற்றம்பலம்.

தில்லை சிவஸ்ரீ எஸ்.கார்த்திகேய தத்புருஷசிவம்,M.A.,
நிறுவனர் : ஆதிசைவர்கள் நலவாழ்வு மையம்
கள்ளக்குறிச்சி-606 202.

## பதிப்புரை

எல்லாம்வல்ல ஸ்ரீ சிவகாமிசுந்தரி ஸமேத ஸ்ரீ நடராஜப் பெருமான் திருவருள் துணைக்கொண்டு "ஸ்ரீ கச்சியப்ப சிவாச்சாரியார் புராணம்" என்ற இந்நூல் வெளியிடப்படுகின்றது.

புராணம் என்றால் பழமையான வரலாறு என்று பொருள் கொள்ளலாம். வேத வேதாந்த, ஆகம சித்தாந்த தத்துவங்களை எளிய மக்களும் புரிந்து கொள்ள வகையில் வந்தனவே புராணங்களாகும்.

**"சூதன் ஒலிமாலை என்றே கலிக்கோவை சொல்லே"**

*- என்று ஸ்ரீ ஞானசம்பந்தப் பெருமானும்,*

**"பாதம் முதலாம் பதினெண் புராணங்கள் என்றே,**
**ஓதென்றுரை செய்தனர் யாவும் ஓதாதுணர்ந்தார்"**

*- என சேக்கிழார் பெருமானும்,*

புராணங்களின் சிறப்பை உணர்த்தியுள்ளார்கள்.

புராணம் வந்த முறையை,

**"நாதனார் அருள் பெறு நந்தி தந்திடக்,**
**கோதிலாது உணர் சனற்குமரன் கூறிட,**
**வாதராயண முனிவகுப்ப ஓர்ந்தனன்,**
**சூதன் ஓதியது மூவாறு தொல்கதை"**

என்று ஸ்ரீ கச்சியப்ப சிவாசாரியர் புராணங்களின் வழிவந்த தன்மையை பாடியருளியுள்ளார்.

வடமொழி பதினெட்டு புராணங்களில், பத்து புராணங்கள் சிவபுராணமாகும் இதில் ஸ்கந்தபுராணம் மிக விசேஷமானதாகும். ஸகந்த புராணத்தில் சங்கிரஸம்ஹிதையில் சிவரஹஸ்ய காண்டம் என்ற உயர்ந்த பகுதி உள்ளது. இதில் ஏழு காண்டங்கள் உள்ளன.

இவ்வேழு காண்டங்களுள் முதன்மையான ஆறுகாண்டங்களை இணைத்து, தெய்வத்தமிழில் ''கந்தபுராணம்'' என்ற ஞானநூலாக பாடியருளினார் ஸ்ரீ கச்சியப்ப சிவாசாரியார்.

சிவப்பரம்பொருளின் முக்கண்களாக போற்றப்படுபவை பெரியபுராணம், திருவிளையாடற்புராணம், கந்தபுராணம் ஆகும். இவற்றில் கந்தபுராணம் இறைவனது நெற்றிக்கண்ணாக பாவித்து போற்றப்படுகின்றது.

கந்தபுராணத்தில் இல்லாதது, எந்த புராணத்திலும் இல்லை - என்ற அளவிற்க்கு தத்துவ ஞான செறிவுகளை கொண்ட உன்னத நூல்.கந்த புராணத்தை பாராயணம் செய்வோருக்கும், புராணத்தை செவிமடுத்து கேட்போருக்கும் பரிபூரண அருளை தரவல்லது. வேண்டிய பலன்களை அளிக்கவல்லது.

இத்தகைய உன்னத நூலினை பாடியவர், காஞ்சி குமரக்கோட்டத்து முருகப்பெருமானுக்கு வழி வழி அடிமையாகிய அகத்தடிமை அர்ச்சகத்தொண்டு புரியும் ஆதிசைவ சிவாச்சாரியார் மரபில், அவதரித்த ஸ்ரீ கச்சியப்பசிவாசாரியர் ஆவர்.

ஸ்ரீ முருகப்பெருமானே ''திகடசக்கர'' என்று முதல் அடியெடுத்து கொடுக்க 10346 செய்யுள்களால் கந்தபுராணத்தை பாடியருளியுள்ளார்.

ஸ்ரீ கச்சியப்பர், சிவாச்சாரியார் மரபினர் என்பதால் கந்தபுராணத்தில் முருகனின் அவதாரம்,அருள் சிறப்புகளை பாடியதோடு, நடுநடுவே பல ஆகம சித்தாந்த கருத்துக்களை நுணுகி எடுத்து கூறியுள்ளது பெரும் சிறப்பாகும்.

பொதுவாக, புராண நூல்கள் பக்தர்களிடம் சென்றடைவது போன்று, அதன் ஆசிரியர்களின் சிறப்பும் வரலாறும் பக்தர்களிடம் பெருமளவு சென்றடைவதில்லை.

சமயநூல்கள் கொண்டாடப்படுவது போன்று, அந்த நூல்களின் ஆசிரியர்களையும் ஆண்டுதோறும் ஞானபூஜை. கருத்தரங்கள் என ஏற்படுத்தி கொண்டாடப்படவேண்டும் என்பது அடியேன் அவா.

அந்தவகையில் கந்தபுராணத்தின் ஆசிரியாரகிய ஸ்ரீ கச்சியப்ப சிவாசாரியார் வரலாறு, பெருமைகளை பக்தர்களிடம் கொண்டு சேர்க்கவேண்டும் என்ற அவாவில் இந்நூல் மறுபதிப்பு செய்யப்படுகின்றது,

ஸ்ரீ கச்சியப்பசிவாசாரியர் புராணம், இன்றைக்கு சுமார் நூறு ஆண்டுகளுக்கு முன் சிதம்பரம் வாமதேவ பட்டாரகர் அவர்களால் மூலப்பாடல் மட்டும் இயற்றப்பட்டு வெளிந்தது. அழகும், சிறப்பும், மேன்மையும் கொண்ட இந்நூலுக்கு இன்றைய தலைமுறைகள் எளிதில் படித்து உணரும் வண்ணம், மூலப் பாடல்களுக்கு, புதியதாக விளக்கவுரை எழுதப்பட்டு, நூறு ஆண்டுகளுக்கு பின் மறுபதிப்பு செய்யப்பட்டு குருவருள், திருவருள், குஹனருள் துணைக்கொண்டு வெளிவருகின்றது.

இந்நூல் சைவசமயத்திற்கும், முருகபக்தர்களுக்கும் ஒரு வரப்பிரசாதமாகும். ஸ்ரீ கச்சியப்ப சிவாசாரியார் அவதாரம், அவர்தம் வரலாறு, பெருமை, சிறப்புகளை உணர்ந்திட இந்நூல் துணை நிற்கும் என்றால் அது மிகையல்ல.

ஸ்ரீ கந்தபுராணம் கொண்டாடப்படும் இடங்களில் எல்லாம் இனிவரும் காலங்களில் ஸ்ரீ கச்சிப்ப சிவாசாரியார் சிறப்புகளும், பெருமைகளும் கொண்டாடப்படவேண்டும். அவர்தம் குருபூஜை வைபவம் அவனியெங்கும் ஆண்டுதோறும் நடத்தப்படும் என்பதே நமது விருப்பம் ஆகும்.

அந்தவகையில் கந்தபுராணத்தையும், கச்சியப்ப சிவாசாரியாரையும் ஒருங்கே நினைவில் நிறுத்தி போற்ற வேண்டியது சைவசமயத்தவரின், முருக பக்தர்களின் தலையாய கடமையாகும்.

## இந்நூல் மறுபதிப்பு செய்திட மூன்று காரணங்கள்

1. ஒரு பழமையான திருக்கோயிலை எவ்வாறு திருப்பணி செய்து புதுப்பிக்கடுவது புண்ணியமோ, தர்மமோ, அதுபோல் பழமையான சைவ ஞானநூல்களை பாதுகாத்து, மறுப்பதிப்பு செய்து, வரும் தலைமுறைகளுக்கு தந்துவிட்டு செல்லும் புத்தக திருப்பணியும் உயர் சிவப்புண்ணியமே தர்மமே ஆகும்.

2. பழமையான இந்நூல் கருத்துக்கள் சைவ உலகைச் சென்றடைய வேண்டும்.

3. காலவெள்ளத்தால் இந்நூல் அழிந்துவிடாமல் உயிர்பெற வேண்டும் என்பதும் ஆகும்.

இந்நூலுக்கு அருள்வாழ்த்துரைகள் வழங்கியருளிய, திருவாவடுதுறை ஆதினம் 24 ஆவது குருமஹா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண பரமாசார்ய சுவாமிகள் அவர்களுக்கும், தருமை ஆதீனம், நட்சத்திர நாயகர் 27-வது குருமணிகள் ஸ்ரீலஸ்ரீ மாசிலாமணி தேசிக ஞானசம்பந்த பரமாசார்ய

சுவாமிகள் அவர்களுக்கும், திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடம் அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்களுக்கும், வணக்கத்தை தெரிவித்துக் கொள்கிறோம்.

வாழ்த்துரைகள் வழங்கிய கல்யாணபுரி (எ) கூனம்பட்டி ஆதீனம் குருமகா சந்நிதானம் அவர்களுக்கும், பிள்ளையார் பட்டி ஸ்ரீ கற்பக விநாயகர் வேதசிவாகம வித்யாலயம் நிறுவனர், முதல்வர் சிவஸ்ரீ கே.பிச்சைக் குருக்கள் அவர்களுக்கும், விரிவாகவும், அழகுறவும் சிறப்புப்பாயிரம் அமைத்த மயிலாடுதுறை சிவபுரம் வேத சிவாகம பாடசாலை நிறுவனர் சிவஸ்ரீ A.V. ஸ்வாமிநாத சிவாசாரியர் அவர் களுக்கும், திருச்சிராப்பள்ளி வேதாகம அகாடமி சிவஸ்ரீ கல்யாண சுந்தர சிவாசார்யர் அவர்களுக்கும், குளித்தலை சீகம்பட்டி சைவ சமய பிரசாரகர் சைவ. சு.இராமலிங்கம் ஐயா அவர்களுக்கும், வணக்கத்தை தெரிவிக்கின்றோம்.

இந்நூல் மறுபதிப்பாக வெளிவர மனமுவந்து பொருள் உதவி கைங்கர்யம் நல்கிய சேலம் இராஜகணபதி திருக்கோவில் அர்ச்சகர் சிவஸ்ரீ K.நாகராஜகுருக்கள் - அமுதா அவர்களுக்கு மனம் நிறைந்த மகிழ்ச்சிகளையும், நன்றிகளையும் உரித்தாக்குகிறோம்.

எளிய உரை எழுதிய குளித்தலை - சீகம்பட்டி சைவ.இராம. மாணிக்கவாசகன், M.A.,M.Phil.,Ph.D., அவர்களுக்கும் பதம்பிரித்து உதவிய அருப்புக்கோட்டை திரு. மு.ஆதிசிவன் அவர்களுக்கும், இந்நூல் அழகுற அமைத்து வெளிவர உதவிபுரிந்த திருச்சிராப்பள்ளி ஸ்ரீ கணநாத நாயனார் நூலகம் போற்றுநர் சிவத்திரு மு. ஜயக்குமார் அவர்களுக்கும், திருச்சிராப்பள்ளி ஆர்.ஜி.பிரிண்டர்ஸ் உரிமையாளர் இரா. ஞானசேகரன் அவர்களுக்கும், அவர்தம் பணியாளர்களுக்கும் நமது உளமார்ந்த நன்றிகள்.

சைவசமயத்தவர்கள் இந்நூலினை படித்து ஸ்ரீகச்சியப்ப சிவாசாரியாரின் குருவருளைப் பெற்றிட வேண்டுமாய் அடியேனது ஆன்மநாயகன் ஸ்ரீ திரிபுரசுந்தரி ஸமேத ஸ்ரீ சோமநாதேஸ்வர பெருமானை பிரார்த்தனை செய்து வணங்குகிறோம்.

''பழைய வைதிக சைவம் பரக்கவே''

திருச்சிற்றம்பலம். சிவார்ப்பணம்.

உ
கணபதி துணை.
திருச்சிற்றம்பலம்.

# ஸ்ரீ கச்சியப்ப சிவாசாரியர் புராணம்

## காப்பு

[1]தம்மறு முகத்தம்பி தமிழ்ப்பு ராணஞ்செய்
அம்மறு வறுகச்சி யப்ப தேசிக
நம்மவர் சரிதையா நவிற்ற வப்பெரு
மும்மதக் களிற்றுமா முகவர்ப் போற்றுவாம். 1

இதன்பொருள் : தம்முடைய ஆறுமுகத் தம்பியாகிய கந்தனது புராணத்தைச் செய்த குற்றமில்லாத கச்சியப்ப சிவாசாரியாருடைய சரிதத்தைப் பாட மும்மதங்களையுடைய யானைமுகப் பெருமானைப் போற்றுவோம்.

சக்[2]க ரம்பயில் வேனிகர் உமைதரு குமரன்
சக்க ரம்பெறு பண்ணவ னறிவருஞ் சரணன்
சக்க ரம்படை கரனெழிற் காஞ்சிசார் விகட
சக்[3]க ரன்றுணை மலர்க்கழ லன்பொடு சார்வாம். 2

இ-ள்: அரத்தைப் போன்றும் வேலைப் போன்றும் கூர்மையான கண்களையுடைய உமாதேவியின் குமாரனும், சிவபிரானிடம் சக்கராயுதம் பெற்ற திருமாலால் அறிய முடியாத திருவடிகளை உடையவரும், சக்கரத்தைக் கையில் ஏந்தியவருமான காஞ்சிநகர் விகடசக்கர விநாயகப்பெருமானுடைய இரண்டு திருவடி மலர்களைச் சார்ந்து அன்போடு பணிவோமாக.

---

1. தம் என்றது களிற்று மாமுகவரை. 2. அரம் பயில் வேல் நிகர் சக்கு உமை. 3. சக்கு சக்ஷு, கண். சக்கரம் படை கரன் - சக்கராயுதத்தையேந்திய விநாயகன்.

# கடவுள் வாழ்த்து.

## சபாநாயகர் துதி.

வலம்புரி மிடற்றுத் தேவி யிடமுற மன்றுண் ஞான
நலம்புரி [1]வியாள யோகர் வரத்தினி னாளு மிந்த
நிலம்புரி தவத்தான் மிக்க வானந்த நிருத்தஞ் செய்யுங்
குலம்புரி தேவ தேவ னடிமலர் குறித்து வாழ்வாம். 01

*இ-ள் : இந்தபூமி செய்த தவத்தினாலும், ஞானநலம் பொருந்திய பதஞ்சலி முனிவர் பெற்ற வரத்தினாலும், தில்லைச் சிற்றம்பலமாகிய மன்றினுள் வலம்புரிச் சங்கு போன்ற கழுத்தினை உடைய சிவகாமி அம்மையார் இடப்பக்கம் நின்று காணும்படியாக ஆனந்தநிருத்தம் செய்கின்ற பெருமை மிக்க ஸ்ரீ நடராசப் பெருமானுடைய திருவடியைச் சிந்தித்து வாழ்வோமாக.*

## சிவகாம சுந்தரியம்மை துதி.

தாமரைக் கணனொடு தன்றன் காதலன்
ஆமர னுருவுதித் தவன்வ லத்தரி
வாமமுற் றிட வுற[2] வாம மார்சிவ
காமசுந் தரிமலர்க் கழல்கள் ஏத்துவாம். 02

*இ-ள் : தன்னுடைய காதலனாகிய சிவபெருமானுடைய திருமேனியில் திருமாலோடு தோன்றி திருமால் வலப்பக்கத்திலும் தான் இடப்பக்கத்திலும் நின்று அருள் புரிகின்ற சிவகாமசுந்தரியின் திருவடி மலர்களைப் போற்றுவோம்.*

## ஏகாம்பரநாதர் துதி.

[3]தம்ப மேவு[4]தந் திக்கரு ளரிக்ககப் படாது
[5]விம்ப மேவுசெவ் விதழ்க்கரு விழியிணைக் கொங்கைக்
கும்ப மேவுகா மக்கணி தழுவிடக் குழைந்தே
கம்ப மேவுறு மிறையவன் கான்மலர் தொழுவாம். 03

1. வியாளயோகர்-பதஞ்சலியார். வியாளம்-பாம்பு. 2. தனது நாயகராகிய அரன்பால் விஷ்ணுவோடு தோன்றி அவ்வரனது வலப்பால் விஷ்ணு இருப்ப இடப்பாலிருக்கின்ற சிவகாமசுந்தரி. 3. தம்பம்-கட்டுத்தறி. 4. தந்தி-கஜேந்திரன். இதில் தந்தி முதலிய சிலசொற்கள் தொனிப் பொருளுமுடையன. 5. விம்பம்-கொவ்வைக்கனி.

இ.ள் : கஜேந்திரன் என்னும் யானைக்கு அருளிய திருமாலுக்கு அகப்படாமல் கொவ்வைக்கனி போன்று சிவந்த இதழ்களையும் கருமையான விழிகளையும் கும்பத்தைப் போன்ற இரண்டு தனங்களையும் உடைய காமாட்சியம்மை தழுவியதால் குழைந்த திருமேனியுடைய ஏகம்பத்தில் வீற்றிருக்கும் இறைவனது திருவடி மலர்களை வணங்குவோமாக.

## காமாக்ஷியம்மை துதி.

[1]கோட்ட முற்றிட லின்மனத் தந்தணர் குழுமிக்
[2]கோட்ட முற்றினு முயர்வுடைத் தெனக்குறி தொண்டைக்
கோட்ட முற்றுநல் லணிகொளக் காஞ்சியுட் [3]காமக்
கோட்ட முற்றுவா ழம்பிகை பதங்களுட் கொள்வாம். 04

இ.ள் : மனத்திலே மாறுபாடு இல்லாத அந்தணர்கள் கூடி அனைத்து நாட்டினும் உயர்வுடையது என்று குறித்துப் போற்றப்படும் தொண்டைமண்டலம் அழகுற்றுத் திகழ நிற்கும் காமக் கோட்டத்திலே வாழ்கின்ற காமாக்ஷியம்பிகையின் திருவடி மலர்களை உள்ளத்திலே சிந்திப்போம்.

## கற்பகவிநாயகர் துதி

விதிபுலி நகர்த்தளி மேலைக் கோபுரத்து
அதிபுகழ் கீழ்முக மாக வேலவன்
பதிதர மேற்றிசை பார்த்து யிர்க்கெலாங்
கதிதரு கற்பகக் களிற்றைப் போற்றுவாம். 05

இ.ள் : வியாக்கிரபாத முனிவரால் நிர்மாணிக்கப்பெற்ற புலிநகரான சிதம்பரத்தின் மேற்கு கோபுரத்தில் வீற்றிருந்து முருகப்பெருமான் கிழக்குமுகமாக நோக்கி நிற்ப, மேற்குத் திசையை நோக்கி எல்லா உயிர்களுக்கும் கதியைத் தருகின்ற கற்பகவிநாயகருடைய திருவடியைப் போற்றுவோம்.

---

1. கோட்டம்-மாறுபாடு. 2. கோட்டம்-நாடு. 3. காமகோட்டம்- காமாக்ஷி கோயில்.

## சுப்பிரமணியர் துதி.

[1]புலவர் தம்பகை வாட்டிய வேல்கொடு புவிக்கண்
உலவு மெம்பகை யெவற்றையும் ஒறுத்திட வுன்னி
நிலவு மூவிரு முகமுடை நிருமலக் கொழுந்தின்
அலரு றுந்திருத் தாண்மலர் முடியுற அணிவாம். 06

இ.ள் : தேவர்களின் பகைவர்களாகிய அசுரர்களை வாட்டிய வேலாயுதத்தைக் கொண்டு பூமியில் அடியவர்களாகிய எம்முடைய பகையினையும் நீக்க எண்ணி ஆறுதிருமுகங்களுடன் எழுந் தருளியிருக்கும் நிருமலக் கொழுந்தின் ஒளிபொருந்திய திருவடி மலர்களை முடிமேற் கொண்டு வணங்குவோம்.

## விகடசக்கர விநாயகர் துதி.

வடசக் கரன்[2] மரு மகன [3]ழற்பெறு
திடசக் கரனரு டெள்ளி யாகுமா
நுடசக் கரமிகு துதிகொள் காஞ்சிவி
கடசக் கரன்மலர்க் கழல்கள் ஏத்துவாம். 07

இ.ள் : ஆலிலையில் துயில்கின்ற திருமாலுடைய மருமகனும் தழல் பொதிந்த நெற்றிக்கண்ணை உடைய சிவபெருமானுடைய புத்திரனும் மானுடர் மிகுதியான வணக்கம் செய்யும் காஞ்சி நகரின்கண் வீற்றிருக்கும் விகடசக்கரனுமாகிய விநாயகப் பெருமானுடைய திருவடி மலர்களை வணங்குவோம்.

## குமரகோட்டத்து அறுமுகக் கடவுள் துதி.

சரக்[4]கோட்ட மனகருங்கட் டையல்ஒரு பாகத்துச்
சிரக்கோட்ட முறுதிங்கட் செஞ்சடையா னீன்றருளெவ்
வரக்கோட்ட நகர்களினு மகிமைபெறு கச்சியுட்கு
மரக்கோட்ட மருவுமறு மாமுகனைப் போற்றிடுவாம். 08

1. புலவர்-தேவர். 2. வடசக்கரன்-ஆலிலையிற் றுயிலும் விஷ்ணு 3. அழல் பெறு திடசக்கு அரன். மாநுட சக்கர மிகு நுதிகொள் காஞ்சி மானுட வடிவத்தார் மிகுந்த வணக்கஞ்செய்கின்ற காஞ்சி. 4. கோட்டம் கூட்டம், வளைவு, நாடு, கோயில்.

இ.ள் : அம்பினைப் போன்று கூரிய கரிய கண்களை உடைய உமையம்மையை ஒரு பாகத்திலே கொண்ட வளைந்த சந்திரனைச் சிரசிலே அணிந்திருக்கின்ற சிவபெருமான் தந்தருளிய உயர்ந்த நகரங்களில் மகிமை பொருந்தி காஞ்சி குமரக்கோட்டத்தில் எழுந்தருளியுள்ள ஆறுமுகப் பெருமானைப் போற்றுவோம்.

## வீரவாகுதேவர் துதி.

**தந்தைதன் றனக்கு முந்தித் தந்தருள் வாள்கொண் டந்தப்**
**புந்தியில் இ[1]ரவித் தெவ்வாம் புரைகெழு மவுணன் யாக்கை**
**சிந்திநாற் றுண்ட மாகத் திருநெடு வேலோ னல்கு**
**மைந்து றுவரங்கொள்வீர வாகுவைமனத் துட்கொள்வாம். 09**

இ.ள் : தன் தந்தையாகிய சிவபெருமானால் தரப்பெற்ற வாளைக் கொண்டு பானுகோபனுடைய யாக்கையை அழித்து முருகப் பெருமானிடத்து வரம் பெற்ற வீரவாகு தேவரை மனத்தில் வைத்து வணங்குவாம்.

## சமயகுரவர்கள் துதி.

**வெள்[2]ளங்கம் பூம்பாவை விதித்தபிரான் கழல்போற்றி**
**உள்ளங்க மொளிர்சூலத் துறுகுறியார் பதம்போற்றி**
**கள்ளங்க ளகல்பரவை காதலர்த மடிபோற்றி**
**[3]நள்ளங்க முறுதிருவா சகநவின்றார் சரண்போற்றி. 10**

இ.ள் : வெண்மையான எலும்பும் சாம்பலும் பூம்பாவையாக உயிர்ப்பித்த திருஞானசம்பந்த நாயனார் திருவடிகள் போற்றி. ஒளி பொருந்திய சூலக்குறி பொறிக்கப்பெற்ற தோளை உடைய திருநாவுக்கரசருடைய திருவடிகள் போற்றி. கள்ளம் ஒன்றும் இல்லாத பரவைநாச்சியாருடைய காதலர் சுந்தரமூர்த்தி நாயனாருடைய திருவடிகள் போற்றி. விரும்பத்தக்க பாடல்களால் ஆன திருவாசகத்தை அருளிய மாணிக்கவாசகருடைய திருவடிகள் போற்றி.

---

1. இரவித்தெவ்வு-பானுகோபன். 2. அங்கம்-என்பு. 3. கள் அங்கம் உறு-விரும்பத்தக்க சிவபுராண முதலிய உறுப்புக்களை யுடைய.

## திருத்தொண்டர்கள் துதி.

நம்பியா ரூரர்புக னற்றிருத்தொண் டத்தொகைக்குப்
பம்புமெழின் முளையாகிப் பகர்நம்பி யாண்டார்சொற்கு
உம்பர்புகழ் [1]புதராகி யொளிவளர்சேக் கிழார்மொழிக்குச்
செம்பொருணல் லருட்டருவாந் திருத்தொண்டர் பதம்போற்றி.11

*இ.ள் : நம்பியாரூரர் பாடிய திருத்தொண்டத் தொகையில் முளையாகி, நம்பியாண்டார் நம்பிகள் பாடிய திருத்தொண்டர் திருவந்தாதியில் பூடாக வளர்ந்து ஒளிபொருந்திய சேக்கிழார் பாடிய திருத்தொண்டர் புராணத்தில் நல்ல விருக்ஷமாக உயர்ந்து விளங்குகின்ற அறுபத்து மூன்று நாயன்மார்களுடைய திருவடி களை வணங்குவோமாக.*

## கச்சியப்ப சிவாசாரியர் துதி.

ஒப்பறு சூர்முத லுடலங் கீறிய
மெய்ப்படு வேற்படை வீரன் மாக்கதை
தப்பறு தமிழினாற் றந்த சீர்க்கச்சி
யப்பசற் குருபதம் அகத்துட் போற்றுவாம். 12

*இ.ள் : ஒப்பற்ற சூரபன்மனுடைய உடலைக் கீறிய ஞானவேலை ஏந்திய வீரனாகிய முருகப்பெருமானுடைய அருட்கதையைத் தப்பற்ற தமிழினால் கந்தபுராணமாகப் பாடிய புகழ்பெற்ற கச்சியப்ப சிவாச்சாரியருடைய திருவடிகளை உள்ளத்தில் கொண்டு போற்றுவோம்.*

## அகோர சிவாசாரியர் துதி.

[2]தன்னுரைக் கதிராலராகம வெளியிற் றற்பரசிவன் முதற்பொருளின்
முன்னுருக் கிரமமதனை யஞ்ஞான முழுவிருளகற்றித் தீக்கையின் மேன்
மன்னினர்க் குணர்த்த விளக்கிடு புலியூர் வருமருட் குரவரென்று ரைசீர்
துன்னிய அகோரசிவதின கரனைத்தொலை விலன்புடன்றி தந்தொழுவாம்.13

1. புதர்-பூடு. 2. இது அகோரசிவாசாரிய பத்ததி வியாக்கியான ஆசிரியர் நிர்மலமணி தேசிகர் இயற்றிய சுலோகமொழி பெயர்ப்பு.

இ.ள் : தன்னுடைய உரையாகிய கதிர்மூலம் ஆகம வெளியில் தற்பர சிவபரம்பொருளால் அருளப் பெற்ற கிரமங்களை, அஞ்ஞான இருளை நீக்கித் தீக்கை பெற்று நெறியில் நிற்பவர்களுக்கு விளக்கி உதவிடும் புலியூரில் வந்த அருட் குரவனாம் அகோரசிவமாகிய ஞான தினகரனை அன்போடு நித்தமும் தொழுவோமாக.

## நூற்பெயர்.

பாரியமெய் யறிவுடைய பண்டிதர்கொண் டாடுகின்ற
சீரியவிப் புராணத்தின் றிருநாம மிடைவழுவா
[1]நாரியலு மடியருள நண்ணு கச்சியப்பசிவா
சாரியர்பு ராணமெனச் சாற்றுகவிவ் விருநிலனே. 14

இ.ள் : அகன்ற மெய்ஞ்ஞானமுள்ள பண்டிதர்கள் கொண்டாடுகின்ற புகழ்படைத்த இப்புராணத்தின் திருநாமம், இடையறாத அன்பை உடைய அடியார்களின் உள்ளத்தில் நிலை பெற்ற கச்சியப்ப சிவாசாரியார் புராணம் என்று இவ்வுலகினரால் கூறப்படுவதாக.

## அவையடக்கம்.

பொன்முடி பழந்துணி பொன்னிற் கொள்ளவை
மின்முடி வேற்படை விமலன் மெய்ப்புகழ்
தென்மொழி யதிற்புகல் செல்வன் சீரினால்
என்மொழி யையுங்[2]கொளு மியல்புண் டாகுமால்.

இ.ள் : பொன்னைப் பழந்துணியில் முடித்துக் கொள்ளுவர். அதுபோல மின்னல் போன்ற ஒளியுடைய கூரிய வேற்படையை உடைய முருகப்பெருமானுடைய புகழைப் பாடிய கச்சியப்ப ருடைய புகழை என்னுடைய மொழியால் பாடுகின்றேன். பொருளின் உயர்வு கருதி என்மொழியையும் அறிஞர்கள் ஏற்றுக் கொள்வார்களாக.

---

1. நார் - அன்பு. 2. கொளுமியல்பு-ஏற்றுக்கொள்ளுதற்குரிய இயற்கை. அவைக்கு என் மொழியைக் கொள்ளு மியல்புண்டாகும் எனமுடிக்க.

## சிறப்புப் பாயிரம்

திருநெடுவே லிறைகந்த புராணமதைச் செந்தமிழிற் செய்து தந்த
பொருவறுமெய்க் கச்சியப்பசிவன்புகழைப் பைந்தமிழிற் புகன்று தந்தான்
மருவுறுதில் லைப்பதிவாழ் மறைஞான குரவன்வரு வாமதேவ
குருவளர் தொன்மரபுதித்தமுருகபட் டாரகனென் னுங்குரிசின் மாதோ.

*இ.ள் : மங்கலம் பொருந்திய நீண்ட வேலை உடைய முருகப் பெருமானுடைய வரலாற்றைப் பாடிய கச்சியப்ப சிவாச்சாரியா ருடைய சரித்திரத்தைத் தில்லை-மறைஞானசம்பந்த குருவின் மரபில் வந்த முருகபட்டாரகர் என்பவர் பாடியருளினார் என்க.*

*கடவுள் வாழ்த்து முற்றிற்று.*

*ஆகசெய்யுள் – 16.*

## வாழ்த்து

அறுமுகப் பெருமான் வாழ்க அவன்மருங்கு அணங்கார் வாழ்க
வுறுகரத் தயிலும் வோங்கெழின் மயிலும் வாழ்க
குறுகில்குக் குடமும் வாழ்க [1]குகனுள்பல் லிடமும் வாழ்க
நூலினற் காஞ்சி வாழ்க வாழ்கசீர்க் குமர கோட்டம்.

அருமறைத் தொகுதி வாழ்க சிவாகமப் பகுதி வாழ்க
திருவுறு சைவம் வாழ்க மறுவில்வெண் ணீறு வாழ்க
பொருவறு கண்டி வாழ்க புண்ணியத் தொண்டர் வாழ்க
கருவறு ஞானம் வாழ்க கந்தவேள் புராணம் வாழ்க.

குகனருட் கச்சி யப்ப குருபரன் வாழ்க அன்னோன்
அகமகிழ் புராணம் வாழ்க அவனடிக் கன்பர் வாழ்க
மிகவவன் புராண மெங்கும் விளம்புமெய் யடியர் வாழ்க
சகமகிழ்ந் தேத்தும் ஆதி சைவர்கள் வாழ்க வாழ்க.



## நூல்.

[1]தொண்டலத் தொடைத்திருத் துணைவ னேமுதல்
விண்டலத் தமரருள் அனந்த வெவ்வராக்
குண்டலக் குழையுடைக் குன்ற வில்லிபோன்
மண்டலத் துயர்ந்தது தொண்டை மண்டலம். 1

இதன்பொருள் : விண்ணுலகில் வசிக்கும் யானையின் துதிக்கை போன்று மாலை அணிந்த இந்திரன் முதலாகவுள்ள தேவர்களில், அரவினைக் குண்டலம் குழைகளாக அணிந்தவரும் மேருமலையை வில்லாகக் கொண்டவருமான சிவபெருமானே உயர்ந்தவராக விளங்குதல் போல மண்டலங்களில் உயர்ந்து விளங்குவது தொண்டை மண்டலம் ஆகும்.

சேக்கிழார் கலியனார் திருக்கு றிப்பினார்
மேக்குறு பூசலார் விழையும் வாயிலார்
தேக்குமை யடிகளார் திகழு மூர்க்கனார்
ஆக்கமோடு உதித்தரு ளடைந்த நாடிதால். 2

இ.ள் : சேக்கிழார், கலியநாயனார், திருக்குறிப்புத் தொண்ட நாயனார், பூசலார் நாயனார், வாயிலார் நாயனார், ஐயடிகள் காடவர்கோன் நாயனார், மூர்க்க நாயனார் ஆகிய பெரியோர்கள் அவதரித்து அருள்பெற்ற நாடு தொண்டை நாடாகும்.

இடையிலான் றோருடைத் தென்ன நாமகள்
உடையதொல் வடிவமென் றோது [2]அவ்வைதன்
றொடையதி லுரைத்தவித் தொண்டை நாட்டினைக்
கடையனேன் உரைக்கவுங் கருத லாகுமோ. 3

இ.ள் : "தொண்டைநாடு சான்றோருடைத்து" என்று கலைமகள் வடிவமான ஔவைப் பிராட்டியாரால் புகழப்பெற்ற தொண்டை நாட்டின் பெருமையைக் கடையனேன் எங்ஙனம் கூறுவேன்.

1. தொண்டலம்-யானைத் துதிக்கை. 2. ஔவையார் அருளிய பாடல். "வேழமுடைத்து மலைநாடு மேதக்க, சோழ வளநாடு சோறுடைத்து-பூழியர்கோன், றென்னாடு முத்துடைத்துத் தெண்ணீர் வயற்றொண்டை நன்னாடு சான்றோருடைத்து".

நந்தியஞ் சிலம்பிழி நறிய பாலியுற்று
உந்தியந் நதிச்சுழி யொக்கும் அம்பிகை
புந்தியிற் புரி[1]யறம் பொருவ ரன்பதி
தந்திடு நாடெனுந் தண்ட கத்தரோ. 4

இ.ள் : நந்திமலையில் இருந்து இறங்கி வரும் பாலிநதி உந்தியைப் போன்று நீர்ச்சுழி உடையதாய் அம்பிகையைப் போன்று விளங்குகிறது. முப்பத்திரண்டு தருமங்கள் நிகழும் அடையாளமாக முப்பத்திரண்டு சிவாலயங்கள் அமைந்து அந்நகர் சிவபெருமானைப் போன்று உள்ளது.

தன்னையொப் பரியது தவத்தின் மேலது
[2]பின்னைவை குறுவது பெருக்க முள்ளது
துன்னயர் வொழிவது தூய்மை பெற்றது
நன்னய முறுவது நகருட் காஞ்சியே. 5

இ.ள் : நகரங்களிலே சிறந்த காஞ்சியானது தனக்குச் சமானமில்லாதது; தவத்திலே உயர்ந்தது; திருமகள் தங்கி இருப்பது; செல்வ வளம் பெருகியுள்ளது; அயர்வு-துன்பம் இல்லாதது; தூய்மை மிக்கது. பலப்பல நன்மைகளை உடையது.

இன்னநற் புராணமாம் இதற்கு நாயகன்
தன்னறி வாற்புகழ் தருமொர் காஞ்சியாம்
அன்னதற் கதுநிக ராகு மற்றிலை
என்னின்யா னிகரினி இயம்ப வல்லனே. 6

இ.ள் : இந்தப் புராண நாயகரான கச்சியப்ப சிவாசாரியாரால் புகழ்பெற்ற காஞ்சிநகருக்கு இணையான நகரம் ஒன்று இல்லை. காஞ்சிக்கு நிகர் காஞ்சியே ஆகும்.

தேமிகு மறையுடன் சிவாக மக்குறி
[3]போமித யத்திடைப் பொருந்தத் தேவியின்
ஏமியை முலைக்குறி யெய்தி வைகுமோர்
[4]ஆமிர வடியரன் அமர்அக் காஞ்சியில். 7

1. தொண்டைநாட்டுள் சிவதலங்கள் 32. உண்மையின் அவை அம்பிகைபுரி அறம்பொருவு அரன் பதியெனப்பட்டன. அறம்-32 தருமங்கள். 2. பின்னை-இலக்குமி. 3. இதயத்திடைப் பொருந்தமுலைக்குறி யெய்திவைகும் அரன். 4.ஆமிரவடி-மாமரத்தடி.

இ.ள் : ஒளிபொருந்திய வேதம் ஆகமம் போன்று காமாட்சி அம்பிகையின் இரண்டு தனங்களின் குறிகள் பொருந்தப் பெற்ற சிவபெருமான் ஒற்றை மாமர நிழலில் வீற்றிருக்கும் காஞ்சி மாநகரின்கண்.

## வேறு.

**இலங்கு விண்ணோ ருண்முக்க ணிறைவ னுமியைமுந் நூலுட்**
**கலங்கறி வகற்றுஞ் சைவா கமமுமந் திரங்க ளுள்ளே**
**வலங்கொள்ஐந் தெழுத்து மேபோல் வளர்புகழ் கொண்டு மேவுங்**
**குலங்களுள் ஆதிசைவ குலமிகச் சிறந்த தன்றே. 8**

இ.ள் : தேவர்களில் சிவபெருமானே சிறந்தவர்; நூல்களில் சிவாகமங்களே சிறந்தவை. மந்திரங்களில் ஐந்தெழுத்தே சிறந்தது. அதுபோலக் குலங்களில் ஆதிசைவ குலமே சிறந்தது.

**[1]அகாரமு னநாதி சைவம் ஆதிசை வத்தி னோடு**
**மகாசைவ மனுசை வஞ்சீர் மருவுஅவாந் தரசை வம்பின்**
**தொகாதபி ரவர சைவந் தொடருமந் தியசை வம்மென்று**
**[2]இறிகாதமெய் யிவ் வேழ்சைவத் திரண்டதாஞ் சைவமீதால். 9**

இ.ள் : சைவம் என்பது அநாதி சைவம், ஆதி சைவம், மகாசைவம், அனுசைவம், அவாந்தர சைவம், பிரவர சைவம், அந்திய சைவம் என ஏழுவகைப்படும்.

**அடைதரும் அநாதி சைவ ராகிய [3]சதேச மூர்த்தி**
**உடையசத் தியோசா தஞ்சீ ருறுவாம தேவ மேன்மை**
**படைஅகோ ரத்தினோடு பகருந்தற் புருடம் உச்சி**
**இடையம ரீசா னம்மென் றியம்புமை முகங்க ணின்றும். 10**

இ.ள் : அநாதிசைவராகிய சதாசிவ மூர்த்தியின் சத்தியோ சாதம், வாமதேவம், அகோரம், தத்புருடம், ஈசானம் ஆகிய ஐந்து முகங்களினின்றும்.

---

1.அகரம்போல் மதிக்கத் தக்க அனாதிசைவம். 2.இகாத-நீங்காத.
3.சதேசன்-சதாசிவன்.

தீத்திற னறத்தோன் றுங்கோ சிகனெழிற் காசி பன்சீர்
முத்திடு பரத்து வாசன் மொழிகவு தமன்மெய்ம் மேன்மை
யேத்திய [1]குறுமெய் யோக னெனும்இவ்வைந்து இருடி யோர்தங்
கோத்திர மிந்தத் தெய்வ குலத்தின் கோத்திர மதாமால். 11

*இ.ள் : கௌசிகன், காசிபன், பரத்துவாசன், கவுதமன், அகத்தியன் ஆகிய ஐந்து முனிவர்கள் தோன்றினர். இந்த ஐந்து முனிவர்களின் வழித்தோன்றல்களே ஆதிசைவர்கள் ஆவர்.*

### வழித்தோன்றல் - கோத்திரம்.

அழனிவந் தன்ன செங்கே ழவிர்சடை முதல்வன் மெய்யில்
நிழலெனு நாம மேவி நிகழுமத் தேவ தேவன்
குழகுறு மடியெ டுத்துக் கொடுத்ததொண் டத்தொ கைக்குப்
பழமைவித்தாகுஞ் [2]சைவப் பரமன்வாழ் குலமு மீதால். 12

*இ.ள் : நெருப்பைப் போன்று சிவந்த சடையை உடைய சிவபெருமானுடைய நிழல் என்று போற்றப்படக் கூடியவரும், அப்பெருமானால் அடியெடுத்துக் கொடுக்கப் பெற்றுத் திருத் தொண்டத்தொகை பாடியவருமான சுந்தரமூர்த்தி சுவாமிகள் அவதாரம் செய்த பழமையான குலம் இவ்வாதி சைவகுலம்.*

செருவிலி புத்தூர் மன்னித் திகழ்புகழ்த் துணையார்செல்வ
மருவிசை ஞானி யார்நின் மலமுறு சடைய னார்மெய்த்
திருவின்முப் போது மேனி தீண்டுவார் இன்னோர் மாயை
ஒருவுமெய் யன்பின் முன்னர் உதித்த தொல்குலமு மீதால். 13

*இ.ள் : செருவிலி புத்தூரில் தோன்றிய புகழ்த்துணை நாயனார், முப்போதும் திருமேனி தீண்டுவார் (தொகையடியார்) ஆகியோர் உதித்த குலம் ஆதிசைவ குலம்.*

சடங்கவி யாரென் றோதத் தகும்அவ ரோடி யாரும்
அடங்குசி வகோச னார்சீர் வருணர்வா கீச ருண்மை
தொடங்குமுத் துங்கர் மேலோர் துதிபெறு பிரம சம்பு
தடங்கடல் உலகி லின்னோர் தனித்துதி குலமு மீதால். 14

1. குறுமெய் யோகன் - அகத்தியமுனிவன். 2. சைவப் பரமன் - ஆளுடைய நம்பி.

இ.ள் : சடங்கவியார், சிவகோசரியார், வருணர், வாகீச முனிவர், உத்துங்கர், பிரம சம்பு சிவாசாரியர் இவர்கள் தோன்றிய குலம் ஆதிசைவகுலம்.

இப்புவி யெங்கு மேன்மை யியைதர வடநூற் ★சித்தாந்
தப்பிர காசி கைப்பேர்த் தனைநிக ரதனைச் செய்த
ஒப்பினற் சருவான் மாமுன் னுளசம்பு தானு மெய்தி
மெய்ப்பட வவதாரஞ் செய் விழுப்பெருங் குலமு மீதால். 15

இ.ள் : வடமொழியில் சித்தாந்தப் பிரகாசிகை என்ற நூலை இயற்றியருளிய சர்வாத்மசம்பு சிவாச்சாரியார் உதித்த குலம் ஆதிசைவ குலமாகும்.

★(இந்நூல் சிவஞான முனிவரால் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது.)

[1]குருகெயின் நம்பியாண்டார் கூர்அருணந்தி யோடு
மருவுறு நீல கண்டர் வளர்புகழ்ச் சோம சம்பு
திருமலி அகோர வாசான் திரிலோச நசிவ னாதிப்
பெருகுமெய்க் குரவர் பல்லோர் பிறந்ததொல் குலமு மீதால். 16

இ.ள் : திருநாரையூர், நம்பியாண்டார் நம்பிகள், அருணந்தி சிவாச்சாரியார் நீலகண்ட சிவாச்சாரியர், சோம சம்பு சிவாச்சாரியார், அகோர சிவாச்சாரியார், திரிலோசன சிவாச்சாரியார் எனப் பலப்பல ஆன்றோர்கள் அவதரித்த சிறப்புடைய நற்குலம் சிவாச்சார்ய குலமாகும்.

## வேறு.

அப்பெ ரும்புகழ்க் குலமெனு மம்புரா சிக்கோர்
ஒப்பின் மாமதி யென்னவந்து அவதரித் துள்ளோர்
செப்ப ருங்கலை யாவையுந் தெரிந்துளோர் அவற்றுண்
மெய்யப்ப டும்விதி யேபுரிந் தொழுகுமே னிலையோர். 17

இ.ள் : இங்ஙனம் பெரும்புகழ் படைத்த ஆதிசைவ குலம் என்னும் கடலில் பூரணச் சந்திரனைப் போன்று அவதரித்தவர்; கலைகள் அனைத்தையும் உணர்ந்தவர்; அந்தக் கலைகளில் ஞானத்தைத் தருகின்ற வித்தைகளை ஆய்ந்து அந்த நெறியில் வாழ்பவர்.

1. குருகு எயில் - நாரையூர்.

முப்பு ரத்தைமுன் முறுவல்செய் தழற்கட வுட்குத்
[1]துப்பெ னத்தரு பரன்கழற்கு அன்புசெய் தொழும்போர்
வைப்பெ னுஞ்சிவ ஞானத்தோர் வளங்கொள்கா ளத்தி
யப்ப தேசிக நாமத்தோர் அளவில்பல் புகழோர். 18

**இ.ள் :** *முப்புரத்தை எரித்த சிவபெருமானுக்கு நிவேதன மாகிய அன்பு நிறைந்த வழிபாட்டை உடையவர். சிவஞானமாகிய வைப்பு நிதியை உடையவர். அவருடைய திருநாமம் காளத்தியப்ப தேசிகர் என்பதாகும்.*

[2]நாட்டத் தற்புள்சான் றோருறை காஞ்சிநன் னகர்வாய்
ஈட்டத் தக்கபல் வளமுடைச் சூரிற வடிவேல்
ஓட்டத் தற்பரன் உயிர்க்கருள் புரிந்துவாழ் குமர
கோட்டத்து அர்ச்சகர் அனேகருள் ஒருவராய்க் குறிப்போர். 19

**இ.ள் :** *சான்றோர்கள் வாழ்கிற காஞ்சி மாநகரின் கண் சூரன்பன்மன் மார்பிலே வேலாயுதத்தை ஏவிய முருகப்பெருமான் குடிகொண்டு விளங்கும் குமரகோட்டத்து அர்ச்சகருள் ஒருவராக இக்காளத்தியப்ப சிவாசாரியர் விளங்கினார்.*

நேய மிக்கவவ் வருச்சகர் நெடும்பொழு தம்பொற்
சேய தாமரைச் சீறடிக் குமுதவாய் மழலைத்
தூய மைக்கண்மா மைந்தரில் லாமையாற் றுளங்கிப்
பாய வெங்கவ லைக்கடற் பட்டுவா டினரால். 20

**இ.ள் :** *அன்பு நிறைந்த அவ்வர்ச்சகருக்குத் தாமரை போன்ற அடிகளையும் மழலைத் தீஞ்சொலும், மைபோன்ற கண்களும் உடைய குழந்தை இல்லாமையால் மிகவும் மனம் வாட்ட முற்றிருந்தார்.*

[3]கறைய கற்றுநற் புத்திர பாக்கியங் கருதி
யறைத ரும்புகழ்க் குமரகோட் டத்தறு முகத்து
நிறைபெ ருங்கரு ணைக்கட லாகுநின் மலனை
முறைமை யால்விசு வசிப்புடன் வழிபடன் முயன்றார். 21

1. துப்பு-உணவு. 2. நாட்டத்து அற்பு உள்-கருத்தின் அன்பு உள்ள. வேல் ஒட்டு அ தற்பரன். 3. கறை-புத்தென்னுநரகம்.

*இ.ள் : மகப்பேறு இன்மையால் அதனை வேண்டித் தாம் வழிபாடு செய்கிற குமர கோட்டத்து ஆறுமுகப் பெருமானை முறையாகவும் மிகுந்த பக்தியோடும் வழிபட்டு வந்தார்.*

**முயன்ற காலையில் அப்பெரு முதல்வனல் லருளால்**
**இயன்ற தண்டமிழ் நாட்டகத் தியாவரு மெழில்சேர்**
**வியன்ற னிப்புய மாறிரண்டுஉடையன்மெய் யன்பாம்**
**பயன்றி ளைத்தறி வாநந்தப் பரவைபெற் றுயவே.** 22

*இ.ள் : அவ்வேளையில் முருகப்பெருமான் அருளால் தண்டமிழ் நாட்டின் கண் வசிப்போர்க்கு அப்பரம் பொருளிடத்தே பக்தியாகிய பயனில் திளைத்து அறிவானந்தமென்னும் கடலில் இன்பத்தை அடையும் படியாக.*

**அச்சி வத்தனிக் குரவருக்கு அவர்மணக் கற்பின்**
**வைச்சி லங்கிமேம் பட்டவர் அருவயிற் றொருசேய்**
**இச்சி வெண்சுவைப் பாற்கடற் கமுதென வுதித்தார்**
**கச்சி யப்பரென் றவர் [1]பெயர்க் கரணமுற் றருளின்.** 23

*இ.ள் : காளத்தியப்ப சிவாசாரியாருடைய கற்பின் மேம்பட்ட மனைவி கருவுற்று, வெண்மையான பாற்கடலிடத்து அமுதம் விளைந்தது போல ஒரு ஆண் மகனைப் பெற்றாள், அம்மகவிற்குக் கச்சியப்பர் என்று பெயரிட்டனர்.*

## வேறு.

**பம்புசெங் கீரை தால்சப் பாணி முத் தம்வா ரானை**
**யம்புலி சிற்றி லோடவ் வறைசிறு பறைதான் மற்றை**
**நம்புறு சிறுதே ரென்ன நவிற்றுமிவ் விளையாட் டெல்லாம்**
**இம்பரிற் பருவந் தோறும் இயற்றுத லெய்தப் பெற்றார்.** 24

*இ.ள் : அவ்வருட் குழந்தையானது, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வருகை, அம்புலி, சிற்றில், சிறுபறை ஆகிய பருவங்கள் எய்தப் பெற்று வளர்ந்தார்.*

1. பெயர்க்கரணம்-நாமகரணம்.

### வேறு.

பெற்ற வத்திருக் குமரரை யாண்டி னிற் பெருமை
யுற்ற [1]பள்ளியிற் கல்விகற் பிக்கப்புக் கொழியாப்
பற்று மேவுநல் வடமொழி தன்னையும் பயிலு
மற்றை வண்டமிழ் மொழியையுங் கற்பவ ரானார். 25

இ-ள் : *அத்திருக்குமாரனைத் தக்க கல்விக் கூடத்திலே சேர்ப்பித்து வடமொழி தென் மொழிகளைப் பயிற்றுவித்தனர்.*

அன்பும் வாய்மையும் பொறையும்பல் லுயிர்கண் மேலருளுந்
துன்ப மேவுதீ நெறிக்கட் செல் லாதுட லகஞ்சொல்
என்ப காத்தலு மாதிநற் குணங்களெல் லாமும்
இன்ப மோடுஅவ ருடனுதித் துடன்வளர்ந் திருந்த. 26

இ-ள் : *அன்பு, வாய்மை, பொறுமை, உயிர்களிடத்தே இரக்கம், அவ்வுயிர்களுக்குத் தீங்கு நேர்ந்தால் சென்று காத்தல் முதலான அனைத்து நற்குணங்களும் அவருடன் வளர்ந்திருந்தன.*

மழவு ருப்பெறு பெருந்தகை யியல்பின்மற் றவர்தாங்
கிழமை பெற்றஏ ழாண்டினிற் கிளருமுப் புரிநூல்
விழவு பெற்றுமுன் னவர்க்குமுன் னாயினோன் விளம்பும்
பழமறைத்தொடர் பியாவையும் பயின்றனர் மரபால். 27

இ-ள் : *குழந்தை வடிவில் இருக்கும் அப்பெருந்தகை யாருக்கு ஏழாவது ஆண்டில் முப்புரிநூல் விழா (உபநயனம்) நிகழ்த்தப் பெற்றது. முன்னவர்க்கு முன்னவனாகிய சிவபெருமான் அருளிய வேதாகமங்களை முறையாகப் பயிலத் தொடங்கினார்.*

வடமொ ழிக்கண்மா மறையுமங் கமும்வளத் ததிரா
விடமொ ழிக்கன்நல் இலக்கண இலக்கிய மும்மேற்
படவ றிந்துசில் போதினிற் பயின்றுமற் றவற்றுட்
திடமு றத்தனி வண்மைய ராயினார் தெளிந்து. 28

இ-ள் : *வடமொழியில் வேதங்களையும் ஆறு அங்கங் களையும் திராவிடமொழி இலக்கண இலக்கியங்களையும், வெகு சீக்கிரத்தில் கற்றுத் தெளிவெய்தினார்.*

---

1. ஆசிரியர் வித்தியாரம்பஞ் செய்விக்குமாறு பள்ளியிற்புகுந்து.

யாக்கை [1]மேத்திய ராய்ச்சில நாளிறச் சமய
தீக்கை மேவிச்செந் தமிழ்மறை யாயதே வார
வாக்கை வாதவூ ரடிகள்தம் வாக்கையே யோதி
நாக்கை யேற்றதொல் பயனடைந் தாரவர் நலத்தால். 29

இ.ள் : யாக்கையில் மிகவும் தூய்மையுடையவராகிச் சமயதீக்கை பெற்றுச் செந்தமிழ் மறையாகிய தேவாரம் திருவாசகம் முதலிய நூல்களைஓதி நாவினால்ஆன பயனைப் பெற்றார்.

நாட லாவதில் லாதவந் நலமுற்ற பினும்வி
சேட தீக்கைபெற்று இறைவன்ஈ சானவத் திரத்தால்
ஆட நின்றசை வாகம கிரியைக ளடங்கும்
பீட மைந்தபல் காண்டங்கற் றறிந்தனர் பெரிதே. 30

இ.ள் : சாமானியர்களால் எட்டமுடியாத அந்த நலம் பெற்ற பின் விசேட தீக்கை பெற்றுச் சிவபிரானது ஈசான முகத்தில் உற்பவித்த சிவாகமங்களின் கிரியா காண்டங்களை நன்றாகக் கற்றறிந்தார்.

நீண லம்பெறும் அவற்றினை யறிந்திடு பின்நிர்
வாண தீக்கைஆ சாரியா பிடேகநல் வளத்தோடு
[2]ஏணமாகப்பெற் றளவில்சை வாகமத் திலங்கிக்
காண லாயஞா னகாண்டங்கள் கருத்துறப் பயின்று. 31

இ.ள் : பின்னர் நிர்வாண தீக்கை ஆசாரியபிடேகங்கள் பெற்றுச் சிவாகமத்தின் ஞான காண்டங்களைக் கருத்தூன்றிப் பயின்றார்.

அவற்றின் மெய்ப்பொருள் அனைத்தையும் அம்பிகை ஞானம்
எவற்றை யும்முனம் உண்டருள் இறைவர்சம் பந்தர்
தவற்றை நீக்குவா கீசர்சுந் தரர்தமிழ்ப் பொருளாம்
இவற்றை யுந்திரு வாசகத் திருப்பையுங் கேட்டு. 32

இ.ள் : சிவாகம ஞான காண்டங்களைக் கற்றுத் தேர்ந்து, திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகிய சமயாசாரியர்களின் பாடல்களைக் கேட்டுத் தெளிந்தார்.

1. மேத்தியம்-சுத்தம். 2. ஏணம்-நிலைபேறு.

அப்பெ ரும்பொரு ளாரணத்து [1]ஆரணப் பொருளோடு
ஒப்ப நாடவே அபேதமா யிருக்கக்கண் டுணர்ந்து
வைப்பெ னத்திக ழதனைத்தம் மனத்திற்சிந் தித்துத்
துப்பு றத்தெளி வாகவே துணிந்துகொண் டனரால். 33

*இ.ள் : மேற்கூறப்பட்ட ஞானகாண்டக் கருத்துக்களும் நால்வர் பெருமக்களின் பாடற் கருத்துக்களும், வேதத்தின் ஞான காண்டக் கருத்துக்களும் ஒத்திருத்தலை நன்றாகத் தெரிந்து தெளிந்து கொண்டார்.*

துணிந்து மற்றவர் தம்புடைக் குழுமியே தொழும்பாய்ப்
பணிந்து நின்றுமெய் யன்புறு மாணவர் பவங்கள்
தணிந்து மேம்படு திருவரு ளுறுவதற் குரிமை
யணிந்து நின்றபல் கலையெலாம் அவர்க்குரைத்து அமர்வார். 34

*இ.ள் : இவ்வாறு தாம் தெளிந்து கொண்ட உண்மைகளைத் தம்மிடத்தே பணிவும் பக்தியும் கொண்ட மாணவர்களுக்குத் திருவருள் பெறத் தகுதி உண்டாகும் பொருட்டு உபதேசித்து வரலானார்.*

### வேறு.

இவ்வியல் புடைய ராகி யிலங்குகச் சியப்ப ரென்னுந்
திவ்விய குரவர் மெய்ம்மை சேர்ந்த அன்புடன் எஞ்ஞான்றுஞ்
செவ்விய குமர கோட்டஞ் செறிந்துவாழ் அறுமு கத்துக்
[2]குவ்வியப் புற்ற பெம்மான் குரைகழல் அர்ச்சிப்பாரால். 35

*இ.ள் : இத்தகைய மேன்மை பெற்ற கச்சியப்பரென்னும் குருவானவர் உள்ளத்திலே மெய்யன்புடையவராகிக் குமர கோட்டத்திலே வீற்றிருக்கும் ஆறுமுகப் பெருமானை உலகம் வியக்குமாறு பூசித்து வந்தார்.*

ஒருபக லயில்வே லண்ணல் உள்ளுநர்க் கருளு மெய்யோடு
அருளுறு குரவர் கச்சி யப்பர்தங் கனவிற் றோன்றி
இருளக லன்ப னேநீ யிரும்பொருட் காந்தத் துற்ற
பெருமை யுளிரு மூன்றென்னப் பேசுசங் கிதையின் மாதோ. 36

1. ஆரணத்து ஆரணப்பொருள்-வேதத்தின் ஞானகாண்டப் பொருள்.
2. கு-பூமி.

*இ-ள் : ஒருநாள் முருகப்பெருமான் கச்சியப்பருடைய கனவிலே தோன்றி, அன்பனே! நீ, ஸ்காந்த மகா புராணத்திலே உள்ள ஆறு சங்கிதைகளில்....*

**திகழ்ந்த [1]சாங் கரத்தின் முன்னாஞ் சிவரக சியகண் டத்துட்**
**புகழ்ந்தநஞ் சரிதை கந்த புராணமாம் பெயரி னோடு**
**நிகழ்ந்துறத் தமிழி னாலே நெடும்பெருங் காப்பி யம்மா**
**மகிழ்ந்திடப் பாடு கென்ன மனங்கொள ஆஞ்ஞா பித்து. 37**

*இ-ள்: "சங்கர சங்கிதையில், சிவரகசிய கண்டத்தில் இருக்கும் நமது சரித்திரத்தைக் கந்தபுராணம் என்ற பெயரில் தமிழ் மொழியில் பெருங்காப்பியமாகப் பாடுக" என்று ஆஞ்ஞாபித்து...*

**வேறு.**

**"திகட சக்கரச் செம்முக மைந்துளான்" என்னப்**
**[2]பகட மைந்தவிவ் வடிதிரு வாக்கினாற் பகர்ந்து**
**துகட விர்ந்திட வுணர்த்திப்பின் றுலங்கறி வோர்க**
**ணுகட னித்தவின் பக்கட லுருமறைந் திட்டான். 38**

*இ-ள் : அந்நூலுக்குத் திகடசக்கரச் செம்முகமைந்துளான் என்று முதலடி எடுத்துத் தந்து மறைந்தருளினார்.*

**ஆய வேலையின் அவர்விழித் தெழுந்துசெந் தீயின்**
**மேய தோர்மெழு கெனவுள முருகிட மெய்யிற்**
**றூய ரோமங்கள் சிலிர்த்திடச் சொற்றடு மாறப்**
**பாய தொல்கரை நீங்கும்இன் பக்கடற் படிந்து. 39**

*இ-ள் : அப்போது சிவாச்சாரிய சுவாமிகள் நெருப்பிலிட்ட மெழுகு போல உருகி, உரோமஞ்சிலிர்த்து, மொழி தடுமாறி கரையற்ற இன்பக் கடலில் திளைக்கலானார்.*

**ஒன்றி னுக்கும்பற் றாத[3]புன் புழுத்தலை யுதிரச்**
**சென்று லைந்தநா யினுஞ்சிறு கடையனாம் எனையும்**
**இன்று தானொரு பொருட்படுத் தெழுந்துவந் தருள்செய்**
**வென்றி வேற்படை யவனருள் இருந்தவா றென்னே. 40**

---

1. சாங்கரம்-சங்கரசங்கிதை. 2. பகடு-பெருமை. அறிவோர் கண் உகள் தனித்த இன்பக் கடல்- அறிவோரிடத்துப் புரளுகின்ற இன்ப சாகரமாகிய குமரவேள். 3. தலை புன் புழு உதிர வுலைந்த நாய்.

*இ.ள் : ஒன்றினுக்கும் பற்றாத புழுத்தலையுடைய சிறு நாயினும் கடையவனாகிய என்னையும் ஒரு பொருட்டாக எண்ணி அருள் செய்த வேற்படை அண்ணலின் கருணைதான் என்னே!*

**என்ன வானந்தக் கூத்திழைத் தாரவ ரிதயப்**
**பொன்ன வாங்கடற்கு அறுமுகப் புனிதன்வந் ததுபோல்**
**அன்ன வால்வளைக் கடலகத்து ஆயிரங் கதிரோன்**
**அன்ன ராகவே வந்தன னடந்தது கங்குல். 41**

*இ.ள் : என்று கூறி ஆனந்தக் கூத்தாடி மகிழ்ந்தார். அவருடைய இதயமாகிய கடலில் அறுமுகப் புனிதன் தோன்றியது போல வெள்ளிய சங்குகள் நிறைந்த கடலிடையே கதிரவன் தோன்றினான்.*

### வேறு.

**அத்தி னத்தவ ரார்வுற**
**நித்தி யக்கட னேர்வுறீ இப்**
**புத்தி யிற்குக பூசைமெய்ப்**
**பத்தி யோடு பயின்றபின். 42**

*இ.ள் : அன்று நித்தியக் கடன்கள் செய்தபின் முருகப் பெருமானை மெய்யன்போடு பூசனை செய்தார்.*

**நலமு ளங்கை முந் நான்கினா**
**னலர ருட்கொ டமைத்திட**
**வலமை யோடுது வக்கினார்**
**புலமை மேவு புராணமே. 43**

*இ.ள் : நலம் பொருந்திய பன்னிரு கரத்தோனுடைய அருளைக் கொண்டு வல்லமையோடு புராணம் பாடத் தொடங்கினார்.*

**செய்யு ளூறு தினந்தொறு**
**மையெ னப்பகர்ந் [1]தஃபொறி**
**கையி லேடுநீள் கண்டமுந்**
**தெய்ய பூசை[2]யல் செய்தபின். 44**

1. அஃபொறி-அவைகளை யெழுதிய, 2.அல்-இரவு.

இ.ள் : தினந்தோறும் நூறு செய்யுட்களை எழுதி அவ்வோலைச் சுவடிகளை, இரவு பூசை முடிந்த பின் (அர்த்த சாம பூசைக்குப் பின்)

குமர கோட்டத்து அமர்ந்தங்ங
குமர வேள்குன் றெறிந்தவன்
அமரர் நாதனடி க்கணே
யமர வேவைத்து வன்பினே. 45

இ.ள் : குமரகோட்டத்து முருகப்பெருமானுடைய திருவடியிலே வைப்பார். குன்றெரிந்த-கிரவுஞ்ச கிரியைப் பொடியாக்கிய, நாதன் - முருகன்.

மாற்றி றிண்கத வத்தினை
யாற்றிக் [1]காப்பயி லண்ணலைத்
தேற்றி யுற்றதஞ் சிந்தையிற்
போற்றி மாளிகை போவரால். 46

இ.ள் : பிறகு அவ்வாலயத்தின் வலிய கதவுகளைக் காப்பிட்டு விட்டுக் கந்தக் கடவுளைச் சிந்தை செய்து போற்றி வணங்கித் தமது மாளிகைக்குச் செல்வார்.

பிற்றை யேல்வைமுற் [2]பேசுகொன்
னற்றை நித்திய மாகிய
வொற்றை நல்விதி யொய்யென
முற்றை மேவ முடித்தரோ. 47

இ.ள் : மறுநாட் காலையில் வழக்கமான நித்திய விதிகளை முடித்துவிட்டு ஆன்மார்த்த வழிபாடுகள் செய்து மிக விரைவுடன் ஆலயத்திற்குச் சென்றார்.

பூசை யாற்றிய பொன்மயத்
தேசை வீசுநற் [3]சேதிமத்
தாசை யோடு ளணைந்தெடுத்
தோசை யேடுபார்த் துற்றரோ. 48

---

1. காப்பு ஆற்றி. 2. கொன்-பெருமை. விதிமுற்றுதலையடைய முடித்து.
3. சேதிமம்-கோயில்.

இ-ள் : நாடோறும் பூசித்து வரும் பொன்மயமான ஒளிவீசும் குமரகோட்டத்தில் உள்ளே சென்று அந்த ஏடுகளை எடுத்துப் பார்த்தபோது...

இன்ன திற்சில் இடங்களிற்
சின்ன மாத்திருத் தப்படும்
அன்ன தைக்கண் ணுற் றன்புடன்
மன்ன வேசிரம் வைத்தரோ. 49

இ-ள் : அந்த ஏடுகளிற் சில இடங்களில் சிறுசிறு திருத்தங்கள் செய்யப்பட்டிருக்கும் அதனைக் கண்டு வியந்து அன்போடு தமது சிரசிலே வைத்துக் கொண்டு...

வசன மின்றி[1]யேல் வையிறை
நிசமு ளானந்த நீள்பர
வசம தாகிய வண்ணிலைஇ
[2]யசநம் பின்னர் இயற்றுவார். 50

இ-ள் : சிறிது நேரம் மௌனமாகி, வசனம் ஏதும் கூறாமல் ஆனந்த பரவசத்திலே நிலை பெற்றவராய்ப் பின்பு, பூசித்து, வழக்கம்போல் எழுதத் தொடங்கினார்.

## வேறு.

அறையுமிவ் வணங்கச்சி யப்ப நாயனார்
இறைமைகொண் முருகவே ளெழிற்ச ரித்திரப்
பொறைகெழு புகழ்க்கந்த புராணம் பாடியே
முறைபெற முடித்தனர் முடித்த லாவதே. 51

இ-ள் : இவ்வாறாகக் கச்சியப்ப நாயனார் முருகப் பெருமானுடைய திவ்ய சரித்திரத்தைக் கந்தபுராணமாக முறைப்படி பாடி நிறைவு செய்தார்.

---

1. இறையேல்வை வசனமின்றி-கணநேரம் மௌனமாகி. 2. யசனம்-பூசை.

## வேறு.

காப்பொடு கடவுள் வாழ்த்துக் கருதவை யடக்க மாற்றுக்
[1]கோப்பமை படல நாட்டுக் குறைவறு படல மென்று
நீப்பரு நகர மேன்மை நிலவுமப் படலம் ஆன்றோர்
பாப்புகழ் பாயி ரத்தின் படலமென் றாக்கிப் பின்னர். 52

இ.ள் : *காப்பு, கடவுள் வாழ்த்து, அவையடக்கம், ஆற்றுப் படலம், நாட்டுப் படலம், நகரப் படலம், பாயிரப்படலம் இவற்றை வகுத்துப் பின்...*

## வேறு.

காண்டகு முற்பவ காண்ட மாசுர
நீண்டமா கேந்திர நிலை[2]ய வுத்தமா
மாண்டகு தைவிக மருவு தக்கநற்
காண்டமென் றிவ்வறு காண்ட மாக்கியே. 53

இ.ள் : *உற்பத்திக் காண்டம், அசுர காண்டம், மகேந்திர காண்டம், யுத்த காண்டம், தேவ காண்டம், தக்ஷகாண்டம் என ஆறு காண்டங்களாக்கி...*

## வேறு

### முதலாங் காண்டம் – உற்பத்திக் காண்டம்.

அவ்வறு காண்டந் தம்மு ளாதிகாண் டத்தி னீடல்
ஒவ்விய திருக்கை லாச மும்உறுபார்ப் பதியு மேலாஞ்
செவ்விய மேரு வுஞ்சீர் செறிந்தகா மதக னம்மும்
எவ்வமின் மோனநீக்கு மெழிற் றவங் காண்டலும்மே. 54

இ.ள் : *அவ்வாறு காண்டத்துள் முதலாவது உற்பத்திக் காண்டத்தில் திருக்கைலாசப் படலம், பார்ப்பதிப்படலம், மேருப்படலம், காமதகனப் படலம், மோனம் நீங்கு படலம், தவங் காண் படலம்.*

முறைமணப் பேச்சு மந்த முழுவரைப் புனைவு மாற்றல்
உறைதரு கணங்கள் செல்கை யுந்திருக் கல்யா ணம்மு
மறைதிரு வவதா ரப்பே ரதுவுநற் றுணைவ ரானோர்
கறைதபு வருகை தானுங் கமழ்சர வணமு மன்றே. 55

1. கோப்பு-தொடர்ச்சி. 2. யவுத்தம்-யுத்தகாண்டம்.

*இ.ள் : மணம்பேசு படலம், வரை புனை படலம், கணங்கள் செல் படலம், திருக்கல்யாணப் படலம், திருவவதாரப் படலம், துணைவர்வரு படலம், சரவணப் படலம்.*

திருவிளை யாட்டுங் கோட்டிற் திகழ்தக ரேற்ற முஞ்சீர்
ஒருவய னைச்சி றைக்க ணுறுவிப்பு நீப்பும் பின்னர்ப்
பெருவிடைப் பேறும்வீறு பெறும்படை யெழலும் வீர
மருவுதா ரகன்வ தைப்பு மகிழ்தேவ கிரியு மாதோ. 56

*இ.ள் : திருவிளையாட்டுப் படலம், தகரேறு படலம், அயனைச் சிறைபுரி படலம், அயனைச் சிறைநீக்கு படலம், விடைபெறு படலம், படைஎழு படலம், தாரகன்வதைப் படலம், தேவகிரிப் படலம்.*

வலவசு ரேந்தி ரன்சீர் மகேந்திரஞ் செல்கை யும்பேர்
நலவழி நடையு மேன்மை நகுகுமார புரியும் பார்
சொலவருங் குரூர மேய சுரம்புகு தலும்பூஞ் சோலை
திலவிடை யின்றி மேவிச் செறிதிருச் செந்தில் தானும். 57

*இ.ள் : அசுரேந்திரன் மகேந்திரம் செல் படலம், வழி நடைப் படலம், குமார புரிப்படலம், சுரம் புகு படலம், திருச்செந்திப் படலம்.*

## இரண்டாங் காண்டம் – அசுர காண்டம்.

மருவிரண் டாங்காண் டத்தின் மாயையுங் காசி பப்பேர்த்
திருமுனி புலம்ப லுஞ்சேர் தைத்தியர் தோற்ற மும்பார்
தெரிதரு காசி பத்திண் முனியுப தேச மும்பண்
புரிமைமார்க் கண்டே யச்சீ ருதுவுமற் றதுவுமன்றி. 58

*இ.ள் : இரண்டாம் காண்டமாகிய அசுர காண்டத்தில், மாயைப் படலம், காசிபன் புலம்புறு படலம், அசுரர் தோற்றுப்படலம், காசிபன் உபதேசப் படலம், மார்க்கண்டேயப் படலம்.*

மாயையு பதேச மும்பின் மற்றவ ணீக்க முந்தொல்
ஆயதா னவர்தம் யாக மதுவுநல் வரத்தின் பேறும்
தூயசுக் கிரனார் செய்த தொகையில்உ பதேச மும்பொன்
பாயவண் மையதா மண்ட கோசமும் பகருங் காலே. 59

இ.ள் : *மாயை உபதேசப்படலம், மாயை நீங்குபடலம், அசுரர் யாகப்படலம், வரம்பெறு படலம், சுக்கிரன் உபதேசப் படலம், அண்ட கோசப் படலம்.*

திக்குவி சயமு மந்தத் திகழெதிர் கொளலும் வண்மை
மிக்கவு ருத்தி ரர்கேள் வியுநகர் செயலு மேன்மைத்
தக்கவர் புகழ்பட் டாபி டேகமுந் தகுவர் போற்றத்
தொக்கபல் வளங்கள் சூழத் தொல்லர சாட்சி செய்வும். 60

இ.ள் : *திக்குவிசயப் படலம், எதிர்கொள் படலம், உருத்திர வேள்விப் படலம், நகர் செய் படலம், பட்டாபிஷேகப் படலம், அரசுசெய் படலம்.*

அமரரை யேவல்கொள்கை யதுவுந்திண் புதல்வர்ப்பேறுந்
தமநிற வில்வ லன்வா தாவியுங் குலிச மேந்தும்
இமையவர்க் கிறைக ரந்தாங் கியைவுமின் மணிசேர்விந்தச்
சிமையமு மகத் தியப்பேர்ச் செறிவுமன் றிற்பொ ருப்பும். 61

இ.ள் : *தேவரை ஏவல்கொள் படலம், புதல்வரைப் பெறு படலம், வில்வலன் வாதாபிப்படலம், இந்திரன் கரந்துறை படலம், விந்தகிரிப்படலம், அகத்தியப் படலம்...*

பெருத்துறு விந்த நீண்ட பிலம்புகு வதுந்தீச் செய்கை
விருத்திவில் வலன்வா தாவி விளிவுங்கா விரியி னீப்புந்
திருத்தமரர் திருக்குற் றாலச் சேர்வும்இந் திரனர்ச் சிப்பும்
பொருத்த மிக்குள்ள தேவர் புலம்பு மயிராணி சோர்வும். 62

இ.ள் : *கிரவுஞ்சப் படலம், விந்தம் பிலம்புகு படலம், வில்வலன் வாதாபி வதைப்படலம், காவிரி நீங்கு படலம், திருக்குற்றாலப் படலம், இந்திரன் அருச்சனைப்படலம், தேவர் புலம்புறு படலம், அயிராணி சோகப் படலம்.*

நந்தலில் இறைமை பூண்டு நணுகும காசாத் தாவும்
இந்திரன் கயிலை செல்கை யிதுவும சமுகி யும்பெண்
இந்திராணி மறுப்புஞ் சீரியை மகாகாள ரேய்வும்
அந்தவச முகிசோக மதுவு மேயன்றிப் பின்னர். 63

இ.ள் : *மகாசாத்தாப் படலம், இந்திரன் கயிலைசெல் படலம், அசமுகிப்படலம், இந்திராணி மறுதலைப் பஙடலம், மாகாளர் வருபடலம், அசோமுகி சோகப் படலம்.*

இந்திரன் மீட்சி யேயு மிணையில் சூரர சிருப்பு
மந்தவெந் திறல் கொண்டுள்ள வசமுகி நகர்காண்பும் மற்று
இந்தவசமுகி யென்னு மிவள் புலம்புகையுஞ் சூரன்
நந்துதண்டிப்புந் தேவ ருருஞ்சிறைநண லுமன்றே. 64

இ.ள் : இந்திரன் மீட்சிப் படலம், சூரன் அரசிருக்கைப் படலம், அசமுகி நகர்காண் படலம், அசமுகி புலம்புறு படலம் சூரன் தண்டஞ்செய் படலம், அமரர் சிறைபுகு படலம்.

## மூன்றாங் காண்டம் – மகேந்திர காண்டம்

அந்தமாமூன்றாங்காண்ட மதிற்றிறல்வீரவாகு
கந்தமாதனத்திற்சேர்வுங் கருங்கடற்பாய்வுந் திண்மை
வந்திடுவீரசிங்கன் வதையும்இலங்கைவீழ்வுஞ்
முந்ததிவீரன்மாய்வு மொழி மகேந்திரத்திலேய்வும். 65

இ.ள் : மூன்றாவதான மகேந்திர காண்டத்தில் வீரவாகு கந்த மாதனம் செல் படலம், கடல்பாய் படலம், வீரசிங்கன் வதைப் படலம், இலங்கை வீழ்படலம், அதிவீரன் வதைப்படலம், மகேந்திரஞ் செல் படலம்.

தகுகயமுகன்வதைப்புந் தைத்தியர் சூழ்ந்துவாழு
நகர்புகலதுவுமேன்மே னலிசயந்தன்புலம்பு
மிகுசயந்தன்கனாவின் காட்சியும் வீரவாகு
வகைசயந்தனைத் தேற்றுஞ்சீ ரவைபுகுத லுமேயன்றி. 66

இ.ள் : கயமுகன் வதைப்படலம், நகர் புகு படலம், சயந்தன் புலம்புறு படலம், சயந்தன் கனவுகாண் படலம் வீரவாகு சயந்தனைத் தேற்றுபடலம், அவைபுகுபடலம்.

சதமுகன் வதையுங் காவ லாளரின் வதையுந் தக்க
விதநகரழி வினோடு மேவுசகத்திரத்திண்
மதமுறுவாகுகள்வீ வதும்வச்ரவாகுமாய்வும்
வதநிதமுற்றயாளி மாமுகன் வதையு மன்றே. 67

இ.ள் : சதமுகன் வதைப்படலம், காவலாளர் வதைப்படலம், நகரழிபடலம், சகத்திரவாகுகன் வதைப்படலம், வச்சிரவாகு வதைப்படலம், யாளிமுகன் வதைப்படலம்.

விறலுறு வீரவாகு மீட்சியும்வீ றுபெற்ற
குறைவறு சூரபன்மன் கோனகர் புரிவுமற்றை
யறைபுகழ்ச் சூரபன்ம னமச்சியல துவுமந்தக்
கறையொழி கின்றநாலாங் காண்டமற்ற தனிடத்தே. 68

*இ.ள் : வீரவாகு மீட்சிப்படலம், சூரன் நகர்புரி படலம், சூரன் அமைச்சியற் படலம்.*

## நான்காங் காண்டம் – யுத்த காண்டம்

உரவுறும்ஏமகூட மும்வரவுகேள்வியுஞ்சீர்
தருமுதலிரண்டு மூன்றாச் சாற்றுநாண் முறைமைக் கேற்ப
விரவியம் பகைஞன்சூர னெல்லைதன் பகைவன் போருந்
திருநகர்புக லுமந்தத் திறலிரணியன்செய்போரும். 69

*இ.ள் : நாலாங் காண்டமாகிய யுத்தகாண்டத்தில் ஏமகூடப்படலம், வரவு கேள்விப் படலம், முதனாட் பானு கோபன் யுத்தப் படலம், இரண்டாம்நாள் சூரபன்மன் யுத்தப்படலம், மூன்றாம்நாள் பானுகோபன் யுத்தப்படலம், நகர்புகு படலம், இரணியன் யுத்தப் படலம்.*

அவுணனக்கினி முகத்த னடைவதை யதுவும் மெய்ம்மை
தவறுற லுற்றமூவா யிரர்வதை தானுமாவாம்
உவமையில் புண்டரீகத் துற்றுகை தருமகோபன்
வவன்வதை யதுவும்பானு வடையலன் வதையு மன்றே. 70

*இ.ள் : அக்கினிமுகாசுரன் வதைப்படலம், மூவாயிரர் வதைப்படலம், தருமகோபன் வதைப்படலம், பானுகோபன் வதைப்படலம்.*

சிங்கமுகாசுரன்வ தையுந்திறற் செல்வமேய
துங்கதைச் சூரபன்மன் றொலைவும் வான்றேவர் போற்றும்
[1]பிங்களனொத்தபுந்தி பெறும்இரணியன்புலம்பு
மங்களமிழற்றியாரும் வழுத்துமம்மீட்சி தானும். 71

*இ.ள் : சிங்கமுகாசுரன் வதைப்படலம், சூரபன்மன் வதைப்படலம், தேவர்கள் போற்றுபடலம், இரணியன் புலம்புறு படலம், மீட்சிப் படலம்.*

---

1. பிங்களன்-வியாழன்.

## ஐந்தாங் காண்டம் – தேவ காண்டம்

**தறைபுகழ்ஐந் தாங்காண்டந் தனிற்பரங் குன்றிற்சேர்வும்**
**அறைதருந்தெய்வயானை யம்மைதன்மணமும்விண்மேல்**
**உறைகுடி யேற்றுங்கந்த வெற்பினி லுறலும்விண்ணோர்**
**இறைமகிழ்போகமேய விந்திரபுரியுமன்றே. 72**

*இ.ள் : ஐந்தாங்காண்டமாகிய தேவகாண்டத்தில், திருப்பரங் குன்று சேர் படலம், தெய்வயானை யம்மை, திருமணப் படலம், விண்குடியேற்று படலம், கந்த வெற்புறு படலம், இந்திரபுரிப் படலம்.*

## ஆறாங் காண்டம் – தக்ஷ காண்டம்

**வென்றஆறாங் காண்டத்தின் மிகுமுபதேச முந்தக்**
**கன்றவஞ்செய லுந்தக்கன் மகப்பெ றுகையும் விண்டோற்றிச்**
**சென்றிடுஞ் சந்த்ரசாப மதுவும் வெண்டிங் கணெற்றி**
**யொன்றுமை கயிலைநீப்பும் உரைத்த காளிந்தி தானும். 73**

*இ.ள் : ஆறாங்கண்டமாகிய தக்ஷகாண்டத்தில் உபதேச காண்டம், தக்கன் தவஞ்செய் படலம், தக்கன் மகப்பெறு படலம், சந்திர சாபப் படலம், உமை கயிலைநீங்கு படலம், காளிந்திப் படலம்.*

**உமைதவம்புரிதலும்பண் புறுதிருமணமுந்தக்கன்**
**அமைவுறுகயிலைசெல்கை யதுவுநான் முகத்தின் மேவி**
**யிமைபிரமயாகசாலை செய்தலும்இணைமற்றின்மை**
**சமைதருததீசியோடு ததீசியுத்தரமுமாலோ. 74**

*இ.ள் : உமைதவம்புரி படலம், திருமணப்படலம், தக்கன் கயிலை செல் படலம், பிரம யாகப்படலம், சாலை செய்படலம், ததீசிப் படலம், ததீசி உத்தரப் படலம்.*

**ஆங்கயமுகனுற்பத்தி யஃதும்அனந்தன்சாப**
**நீங்கலுந்தானமுங்கேள் வியுமுமைவர லுநீண்ட**
**பாங்குறுகின்றவீர பத்திரத்துடனியற்றுந்**
**தீங்கமை யாகசங்கா ரமும் அதுசென்ற பின்னர். 75**

*இ.ள் : கயமுகனுற்பத்திப் படலம், அனந்தன் சாபம்நீங்கு படலம், தானப்படலம், வேள்விப்படலம், உமைவரு படலம், வீரபத்திரப் படலம், யாகசங்காரப் படலம்.*

கழலடிமுடி தேடிடுந்தக் கன்சிவபூசை செய்வும்
விழைவு றுதனிவேற்கந்த விரதமுமதிமுகத்துச்
செழுமைகொள்வள்ளியம்மை திருமணமதுவுமேவப்
பழுதின்மற்றவற்றையெல்லாம் படலமதாக்கிப்பின்னர். 76

இ.ள் : அடிமுடிதேடு படலம், தக்கன் சிவபூசை செய் படலம், கந்த விரதப் படலம், வள்ளியம்மை திருமணப் படலம் என்றவாறு படலங்களை அமைத்துப் பின்...

சேயுயர்குணத்தாரேத்துஞ் செய்யுளின்வகையால்ஈர்ஐ
ஆயிரத்தொருமுன்னூற்றோ டறையுநாற்பத்தாறுற்று
மேயவத்தொகைபெற்றுள்ள விருத்தத்தையாக்கிநோக்கும்
பாயவிடங்களெல்லாம் பயனுறச் செய்வதிஃதே. 77

இ.ள் : உயர்குணத்தாரால் போற்றப்படும் பத்தாயிரத்து முந்நூற்று நாற்பத்தாறு விருத்தப் பாக்களை உலகமக்களுக்குப் பயன்படும் வகையில் வரிசைப்படுத்தப் பெற்ற முறை இதுவாகும்.

இத்தனிக்காந்தச்செய்யுள் எவற்றினுமெய்திநின்ற
மெய்த்திருப்பதத்தின்சீரு மிகுபொருட்சுவையுமேன்மை
பொத்தியவணியுநீடி புலவர்கொண்டாடயார்க்கும்
பத்தியை மெய்ம்மையோடு பாலித்துநிற்குமன்றே. 78

இ.ள் : இவ்வொப்பற்ற கந்தபுராணச் செய்யுள் ஒவ்வொன்றும் சொற்சுவை, பொருட்சுவை, அணிநலன்கள் நிறைந்து புலவர்களால் கொண்டாடும்படியாகவும் எல்லோருக்கும் முருகப் பெருமானிடத்தில் பக்தி உண்டாகுமாறும் அமைந்துள்ளன.

உமைதருங் குமரமூர்த்தி யொளிரிரு நளினபாதத்து
இமைதரு பொழுதுநீங்கா திலங்குமெய் யன்பிற்பூசை
சமைதரு கச்சியப்பத் தவாவருட்குர வன்வையத்து
அமைவுற நிகழ்சகாத்த மறையெழு நூற்றின்மாதோ. 79

இ.ள் : உமாதேவியாருடைய பிள்ளையாகிய குமாரக் கடவுளை இமைப்பொழுதும் நீங்காமல் அன்போடு பூசிக்கும் குற்றமில்லாத அருட்குரவனாகிய கச்சியப்ப சிவாசாரியர் சகாத்தம் எழுநூற்றில்..

## வேறு

அங்கமர் குமரகோட் டத்தி லன்னதை
இங்கித மாஅரங் கேற்ற வெண்ணியே
மங்கல தினமுநல் வளமு கூர்த்தமுந்
தங்கருத் தகத்துநிச் சயித்துக் கொண்டனர். 80

*இ.ள் : தாம் பாடிய புராணத்தைக் குமரகோட்டத்திலே அரங்கேற்றம் செய்ய எண்ணி மங்கலமான நாள், முகூர்த்தம் இவற்றைக் குறித்துக் கொண்டார்.*

கொண்டுல கெங்கணுங் குலவு முக்கணான்
றொண்டுசெய் பரம்பரைத் தொழும்பர் யாவரு
மண்டுளன் பொடுவர வரைந்து பத்திரந்
துண்டுதுண் டாகவே சூழத் தூண்டினார். 81

*இ.ள் : அதற்கான பத்திர ஓலையைத் தயார் செய்து, சிவபெருமானுக்குத் தொண்டு செய்யும் அடியவர்களுக்கு அழைப்பு விடுத்தார்.*

அறுமுகத் திறைபரன் அமருங் கோட்டமு
மறுவறும் அவனுலா வருநல் வீதியும்
உறுபெரு மலங்கரிப் புறவு றுத்தினார்
பெறுதிறல் ஏவலர் பெரிது வந்தரோ. 82

*இ.ள் : ஆறுமுகப் பரமனார் அமரும் குமரகோட்டத்தையும் அப்பெருமான் உலாவரும் வீதிகளையும் அலங்கரிக்க ஏற்பாடு செய்தார்.*

## வேறு.

[1]விட்ட பத்திரத்
துட்ட கப்பொறித்
திட்ட மங்கலச்
சுட்ட நாளிலே. 83

---

1. செலுத்திய பத்திரத்துள்ளே தகுதியாக எழுதப்பட்ட மங்கலத்தைக் குறிக்கும் அத்தினத்தில்.

இ.ள் : அழைப்பு ஓலையில் குறிக்கப்பெற்ற அந்த மங்கல நாளிலே...

## வேறு.

கருநெறி யகற்றிநற் கதிய ளித்தலாற்
றிருநெறித் தமிழெனச் செப்ப நின்றுமெய்
அருளுரு வாகுதே வார வாசகப்
பொருளறி வல்லவர் பொருக்கென் றெய்தினார். 84

இ.ள் : கருநெறியில் செல்லவிடாமல் உயிர்களுக்கு முத்தியைத் தருவதால் தேவார திருவாசகங்களுக்குத் 'திருநெறிய தமிழ்' என்று பெயர். அத்தகைய தேவார திருவாசகங்களின் பொருளை அறிந்த சான்றோர்கள் விரைந்து வந்தனர்.

நமன்பட வுதைதரு நாத னம்மனோர்
[1]தமங்கெட வுரைத்தமுத் தனிப்பொ ருட்பெருஞ்
சுமங்கல விசேடநற் சுருதி யாஞ்சிவா
கமங்களின் வியுற்பநர் கலந்தங் கெய்தினார். 85

இ.ள் : மார்க்கண்டேயருக்காக எமனை உதைத்தருளிய சிவபெருமான் நம் போன்றவர்களின் மூலமலமாகிய ஆணவ மலத்தைப் போக்குவதற்காக, முப்பொருள் பற்றிய உண்மைகளை அறிவிக்கும் மங்கல விசேடமுள்ள சிவாகமங்களைக் கற்ற விற்பனர்களும் வந்தனர். ஆகமம்-சிறப்பு நூல்.

எண்டிகழ் குணமுடை யிறைவன் எங்கணு
மண்டிய வுலகர்க்கு மகிழ்ந்து கூறிய
திண்டிறல் வேதத்துஞ் செறிந்த வங்கத்தும்
பண்டித ராயினார் பலரங் கேகினார். 86

இ.ள் : எட்டுக் குணங்களையுடைய சிவபெருமான் உலக மக்கள் உய்வடையும் பொருட்டுப் பொதுவாகக் கூறப்பட்ட வேதங்களைக் கற்ற வேத விற்பனர்கள் பலரும் வந்தனர். (வேதம்-பொது நூல்).

1. தமம்-ஆணவம்

நலமுள்தொல் காப்பிய நவின்று வேண்டிய
பலவிலக் கணங்களும் பயின்று சங்கத்துக்
குலவிலக் கியங்களுட் கொள்ளு மூவியற்
புலவர்எவ் விடத்தினும் பொருந்தி வந்தனர். 87

*இ.ள் : நலம்மிகுந்த தொல்காப்பியம் முதலான பல இலக்கணங்களும் சங்க இலக்கியங்களும், இயல் இசை நாடகம் தெரிந்த புலவர்களும் வருகை தந்தனர்.*

[1]கரசல மலைபரி கடுங்கண் வீரர்ச
மரசய நெடுந்திறல் வையஞ் சூழ்தரப்
பரசுபல் புகழொடு பரம்பி யெங்கணும்
அரசர்அன் புடனவ ணடைய வந்தனர். 88

*இ.ள் : யானை, குதிரை முதலான படைகளை உடைய எங்கும் புகழ் விளங்கும்படி ஆணை செலுத்தும் அரசனும் அன்போடு வந்து சேர்ந்தான்.*

தொக்கபல் பொருள்களிற் றுவன்றி நாளுந்தம்
பக்கமுற் றடைபவர் பரிவொ டேற்றிடத்
தக்கன புரியுநற் றரும வான்பிர
புக்களும் வந்தனர் பொருத்த மாகவே. 89

*இ.ள் : தம்மிடத்திலே வருகின்ற புலவர் முதலானவர் களுக்குத் தக்க உபசாரங்கள் செய்து வேண்டும் தருமங்கள் செய்கின்ற உயர்ந்த பிரபுக்கள் வந்தனர்.*

புகலுமிங் கிவரன்றிப் போந்த பத்திரந்
தகவுட னேற்றவர் தம்மைச் சார்ந்தவர்
மிகவவர் நட்பினர் மேவ யாவருஞ்
சுகமொடு துன்னினார் துன்னும் வேலையில். 90

*இ.ள் : இவர்களன்றி ஏனைய பெரியோர்களும், தம்மைச் சார்ந்தவர்களும், நண்பர்களும் (நெருங்கியவர்களும்) வந்து சேர்ந்தனர்.*

1. கரசலமலை-யானை, சமரசய வையம்-போரில் வெற்றிகொள்ளும் தேர்.

## வேறு.

திறமலி கச்சி யப்ப சிவனரு ணூலென் றோது
மறமலி வகற்றுஞ் சீர்க்கு மாரதந் திரத்தி னாற்றான்
நிறமலி மலர்சந்தாதி நிகழ்த்துப கரணங் கொண்டே
அறமலி குமர கோட்டத் தடிகளைப் பூசை செய்தார். 91

இ.ள் : *கச்சியப்ப சிவாசாரியர் அருள்நூலாகிய குமார தந்திரத்தில் கூறப்பட்டபடி குமரகோட்டத்து முருகப்பெருமானை, மலர் சந்தனம் முதலிய உபகரணங்களைக் கொண்டு பூசித்தார்.*

செய்துஅறு முகத்து மேலோன் றிருமுன்னர் மெழுகிப் பீடம்
எய்திட வமைத்துப் பீடத் திலங்குபட் டுறவி ரித்து
[1]வெய்தென மலர்கள் தூவி விரிமணத் தூபங் கோட்டி
மைதவிர் மந்திரத்தின் மருவு மாசனங் கற்பித்து. 92

இ.ள் : *ஆறுமுகப்பெருமானுடைய திருமுன்பு மெழுகி, அழகிய பீடம் வைத்து அதன்மேல் பட்டாடை விரித்து மலர்கள் தூவி, தூபதீபங்காட்டி ஆசன மந்திரங்கள் கூறி.*

கிரிச்சுட ரென்னத் தோன்றிக் கிளர்கந்த புராணந் தீட்டும்
விரிச்சுல[2] ருச்சிப் பெண்ணை வியன்மடன் முறையை யன்பு
தரிச்சுடம் முளத்தொடு அவ்வா சனத்தெழுந் தருளு வித்து
வரிச்சுரும் பலர் அர்ச்சித்து வணங்கிப் பஃறுதிகள் செய்தார். 93

இ.ள் : *மலையில் தோன்றும் சூரியனைப் போன்று விளங்கும் கந்தபுராணம் எழுதப்பெற்ற சுவடிகளை அப்பீடத்தில் எழுந்தருளச் செய்து நல்லமலர்களால் அருச்சித்துப் பல்வகைத் துதிகளும் செய்தார்.*

பொழிதரு மன்பினோடு போற்றிப்பின் பிருந்து கொண்டு
கழிபெருங் காத லுள்ளங் கலந்தனை வோருங் கேட்ப
மொழி[3]திக டசக்க ரச்செம் முகமைந்து ளானென் றோது
மழி விலாத்தலை மைச்செய்யு ளதனை யோர்முறை வாசித்து. 94

---

1.வெய்தென-விரைவாக. 2.உச்சிப்பெண்ணை-உயர்ந்தபனை. விரிச்சு உலர் வியன் மடல் அன்புதரிச்சு உள்தம்உளத்து.

3. "திகட சக்கரச் செம்முக மைந்துளான்,
சகட சக்கரத் தாமரை நாயக,
னகட சக்கர வின்மணி யாவுறை,
விகடசக்கரன் மெய்ப்பதம் போற்றுவாம்".

*இ-ள் : பின்பு எல்லாரும் கேட்கும்படியாகத் "திகட சக்கரச் செம்முக மைந்துளான்" என்னும் முதற்செய்யுளை ஒருமுறை வாசித்து.*

**செப்புதி கடச மென்னுஞ் செய்யுண்முன் னடியுண் மேய**
**திப்பிய பதங்கள் தம்மைத் திகழென்று தசக்க ரவ்வென்று**
**அப்பெருஞ் செம்முகம் மென் றைந்தென் றுளானென் றெய்த**
**ஒப்புறப் பிரித்துக் கொண்டவ் வொண்பதப் பொருளுட் கொண்டு.**

95

*இ-ள் : அச்செய்யுளில் உள்ள பதங்களைத் திகழ், தசக்கர, செம்முகம், ஐந்து என்று பிரித்துக் காட்டி அதன் பொருளை மனத்திலே எண்ணி.*

## வேறு.

**கருதான்றோ ரெணவிளங்கு கின்றபத்துத் திருக்கை**
**களுஞ்செவ்வி யவைந்துதிரு முகங்களுமுள் ளசிவ**
**பெருமானா ருடையவெனப் பொருளுரைத்தா ருடனே**
**பிறங்குமவ ணிருந்ததமிழ்ப் புலவோரு ளொருவர்**
**தருவாய நெடுங்கோட்டுச் செந்தளிர்மா வுருவாய்ச்**
**சாரவுண னோருருவம் ஈருருவாய்ச் சமயக்**
**குருவாய்வேற் படைகொண்டு கூறுசெய்த வொருவன்**
**குரைகழலுட் கொண்டிடு மாசிரியர் தமைக்குறித்தே.** 96

*இ-ள் : சான்றோர்களை விளித்து, "திகழ்கின்ற பத்துத் திருக் கரங்களும் செம்மையான ஐந்து திருமுகங்களும் உள்ள சிவபெருமானுடைய" என்று பொருள் கூறினார்.*

## வேறு.

**வனப்புச் செந்தமிழ் வாய்ந்தசு வாமிகாள்**
**[1]தினப்பு கழ்ச்சொற் றிகழ்தசந் திகடசம்**
**எனப்பு ணர்விதி யேய்ந்ததொல் காப்பிய**
**[2]முனப்பு ணர்விதி முற்றுமில் லென்றனர்.** 97

1. தினப்புகழ்ச்சொல்-தினமும் புகழ்தலையுடைய சொல்லாகிய.
2. முன-முன்ன.

இ.ள் : அப்போது அந்தக் கூட்டத்தில் இருந்த ஒருபுலவர், மாவுருவில் நின்ற சூரபன்மனை வேலாயுதத்தால் இரண்டு கூறாக்கிய முருகப்பெருமானைச் சிந்தையுட் கொண்டிருக்கும் நூலாசிரியரை நோக்கி.

ஆங்கண் மெய்க்கச்சி யப்பசி வன்வினாத்
தாங்கள் கூறிய தொப்பத்த குந்தகும்
ஈங்க தாயின்இம் முன்னடி யென்னுடை
யோங்கு வாக்கதன் றுண்மைய துண்மையே. 98

இ.ள் : சுவாமிகாள்! தாங்கள் கூறிய முதல் அடியில் 'திகழ்தசம்' என்பது 'திகடசம்' என்று உணர்வதற்குத் தொல்காப்பியத்தில் விதி கூறப்படவில்லை என்றார்.

போற்று சங்கப் புலமைய ராகியே
யாற்று நல்லரு ளாறுமு கப்பிரான்
மாற்றின் மெய்த்திரு வாக்கவ ரேயெனக்கு
ஏற்ற மோடுஇவ் வடியெடுத் தீந்தனர். 99

இ.ள் : அதற்குக் கச்சியப்ப சிவாசாரியர், "தாங்கள் கூறியது சரிதான். இம்முதல் அடி என்னுடையதன்று".

என்றக் கேள்வி தனக்கிவ் விடையினை
யொன்ற வேயுரைத் தாரது வுட்கொளீஇ
நன்று கேட்டவந் நாவலர் தாமெழின்
துன்று புன்முறு வன்முகந் தோற்றியே. 100

இ.ள் : "அனைவராலும் போற்றப்படுகின்ற சங்கப் புலவராகி அருள்புரிந்த அப்புலவர்களின் கலகம் தீர்த்தருளிய ஆறுமுகப்பிரான் அருளிய திருவாக்கே ஆகும். அடியேனுக்கு அவரே அடியெடுத்துத் தந்தார்".

குமர கோட்டத் தமர்ந்த குருபரன்
றமர ராயசு வாமிகள் தம்மிடத்து
அமர வேயிவ் வடியெடுத் தீந்ததிங்கு
அமர ரேத்துமெய்ச் சத்திய மாயிடின். 101

இ.ள் : 'குமரகோட்டத்தில் எழுந்தருளியிருக்கும் முருகப் பெருமான் நம்முடைய சுவாமிகளுக்கு அடிஎடுத்துக் கொடுத்தது சத்தியமானால்'.

ஆக வாயினு மாங்கது [1]ராசிய
மேக ருத்துற யாங்கண்மற் றன்னதைத்
தாக மோடு தழுவதல் எங்ஙனம்
பாக முற்றவிப் பண்புள் அவைக்கணே. 102

இ·ள் : *அவர் கூறுவது இரகசியமே ஆகும். இந்த அவையோர் அதனை எப்படி ஏற்றுக் கொள்வது? பக்குவம் மிக்க இந்த சபையோர் முன்பாக,*

அன்ப ருள்ளகம் ஆலய மாக்கொளும்
பொன்பி றங்குமெய்ப் புண்ணிய வேலிறை
வன்பொ ருந்துசு வாமிக ளுக்குமுன்
இன்பு ருக்கொண் டெழுந்தருள் கொள்கை போல். 103

இ·ள் : *அடியார்கள் உள்ளத்தையே ஆலயமாகக் கொண்டு விளங்கும் வேலாயுதக் கடவுள் சுவாமிகளுக்குக் காட்சி கொடுத்தது போல.*

எங்களுக்கு மெளிமையிற் றோன்றிநாம்
பங்க மற்றவிப் பாட்டடி தன்னையே
இங்கி வற்கெடுத்து ஈந்தன மென்றருள்
தங்க வோதிற் றழுவிக்கொள் வாமரோ. 104

இ·ள் : *எங்களுக்கும் எளிமையாகத் தோன்றி இந்தப் பாடல் அடியை யாமே எடுத்துக் கொடுத்தோம் என்று கூறினால் நாங்கள் ஏற்றுக் கொள்வோம்.*

அன்றேன் மற்றிதற் காகும்விதியினை
யின்றேய் வுற்ற இலக்கண நூல்களுள்
ஒன்றே தாயினு முற்றிடி னின்னதை
நன்றே காட்டுக நாடிக்கொள் வாமன்றே. 105

இ·ள் : *இல்லையாயின் இதற்கான விதியினைத் தக்க இலக்கண நூல்கள் ஏதேனும் ஒன்றிலாவது எடுத்துக் காட்டினால் நாங்கள் அதனை ஏற்றுப் போற்றுவோம்.*

1. ராசியம் - இரகசியம்.

அல்லாக் காலையி லாண்டகைத் [1]தண்டுகதிர்ப்
பொல்லா முத்துறழ் புங்கவற் போற்றிசை
யில்லாம் ஈதுஅரங் கேற்றவொட் டேமெனச்
சொல்லா நின்றனர் சொல்வர் குரவரே. 106

இ.ள் : *இவ்விரண்டும் இல்லையெனில் இந்த நூலை அரங்கேற்றம் செய்ய இடங்கொடுக்க மாட்டோம் என்று இயம்பினார். அதற்கு கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள் சொல்கின்றார்.*

இவ்வி ரண்டனுள் ஏன்றமற் றொன்றினைத்
திவ்வி யம்பெறச் செய்குவன் நாளையென்று
அவ்வி யல்பி னருளிச்செய் தாங்கவைச்
செவ்வி யோரைச் செலவுடன் போக்கியே. 107

இ.ள் : *'பெரியோர்களே! இவ்விரண்டு ஆதாரங்களில் ஏதேனும் ஒன்றை நாளைக்கு நிரூபிக்கின்றோம்' என்று கூறினார். அவையோர்களும் அதற்கு இசைந்து கலைந்து சென்றனர்.*

அற்றை நாளின் அமுதருந் தாதுஇரா
வுற்ற காலத் துஞற்றுநற் பூசனை
முற்றி யானபின் மூடிக் கதவினைப்
பற்று சந்நிதிப் பாரிற் படுத்தனர். 108

இ.ள் : *புலவர் பெருமான் அன்று உணவு அருந்தாமல் வழக்கமான பூஜையை முடித்துவிட்டுக் கதவினைப் பூட்டி விட்டு சந்நிதிக்கு முன்பாகப் படுத்துக் கொண்டார்.*

அமைய மங்கதின் ஆறிரு திண்புயத்து
உமைதன் மாமகன் உண்மையு ளங்கவர்
தமைய ளித்திடத் தானவர் சொப்பனத்து
இமையொ டுங்குமுன் னேய்வுறத் தோன்றியே. 109

இ.ள் : *அவ்வமையம் பன்னிரு திருக்கரங்களை உடைய உமையம்மையாரின் திருக்குமரனாகிய முருகப்பெருமான் கச்சியப்ப சிவாசாரியாரது கனவிலே தோன்றினார்.*

---

1. குளிர்ந்த கிரணங்கள் வாய்ந்த துளைபடாத முத்தையொத்த ஆண்டகைப் புங்கவனைப் போற்றுங் கீர்த்திக்கு இடமாகவுடைய இந்நூலை.

**தீர ராமவை சேர்பவர் [1]சோதியஞ்**
**சோர வேபுகழ்ச் சோழதே சத்தினில்**
**வீர சோழிய மென்றொர் இலக்கணச்**
**சீருள் நூலொன்று சேர்ந்திடு மன்பனே. 110**

இ-ள் : *அன்பனே! புலமையுடைய சபையோர் கேட்ட வினாவிற்கு விடை உண்டு. சோழ நாட்டிலே வீரசோழியம் என்று ஒரு இலக்கணநூல் இருக்கின்றது.*

**சிட்டா ரேத்துந் திகழ்தச மென்பன**
**கட்டா கத்தி கடசமெந் றாம்விதி**
**தட்டா நூலதிற் சந்தி படலத்தில்**
**ஒட்டா நிற்கும்ஈ ரொன்பதாஞ் செய்யுளில். 111**

இ-ள் : *"அந்த நூலில் சந்திப்படலத்தில் பதினெட்டாஞ் செய்யுளில் திகழ்+தசம் என்பது 'திகடசம்' என்று புணருவதற்கான விதி இருக்கின்றது."*

**சோழ நாடதிற் றுன்னுமோர் நாவலன்**
**வாழ நூலொடு வந்துநா ளைக்கிவண்**
**[2]காழ ணவ்விதி காட்டுவன் யார்க்குமென்று**
**ஆழ மாக வறைந்து மறைந்தனன். 112**

இ-ள் : *"சோழநாட்டிலிருந்து நாளைக்கு ஒரு புலவன் அந்த நூலைக் கொண்டு வந்து அவ்விதியை எடுத்துக் காட்டுவான்" என்று கூறி மறைந்தருளினார்.*

## வேறு.

**உருவுள வுயிர்கட்கு எல்லாம் உயிரென நிற்கும் வேலோன்**
**அருளிய கனவின் றன்மை யனைத்தையுங் கச்சி யப்ப**
**குருபர னடுத்த வைகற் குழாங்கொள் போதவையோர் யாருந்**
**தெருளுறு மவருட் கொள்ளத் தெருட்டினன் றெருட்ட லோடும். 113**

இ-ள் : *எல்லா உயிர்கட்கும் உயிராக நிற்கும் முருகப் பெருமான் கனவிலே வந்து உரைத்தருளிய தன்மையை மறுநாள் அவையோர்களிடம் தெளிவு பெறும்படி எடுத்துரைத்தார். அதன் படியே.*

---

1. சோத்தியம்-வினா. 2. காழ்-அண்-அவவிதி.

**மருவுவெண் ணீறுகண்டி வயிரவொண் கடக மாரம்**
**பருமணி யாழிபீதாம் பரங்கள் பொன்னரை ஞாட்சுற்றுத்**
**[1]திருமுடிச் சாத்துச் செம்பொற் செம்மணிக் குண்ட லங்கள்**
**உருவொளி ரொரு தம்மேனி யுற்று நல்லழகு வாய்ப்ப. 114**

**இ.ள் :** *நெற்றியில் திருநீறு, உருத்திராக்கம், வயிரகடகம், ஆரம் மாணிக்கக் கல் பதித்த மோதிரம், பீதாம்பரம், பொன்னரை ஞாண், தலைப்பாகை, காதிலே பொற்குண்டலங்கள், ஒளிமிகுந்த திருமேனி உடையவராய் ஒருபுலவர் அங்குவந்து சேர்ந்தார்.*

**புலவர்மற் றொருவர்கையிற் புத்தக மொன்று கொண்டு**
**நலமொடங் கேக அங்க ணணுகினோர் அவரை நோக்கிக்**
**குலமுணீர் யாவ ருங்கள் குலவுகைம் முறையா தென்று**
**வலமொடு வினாவி னார்கள் வந்தநா வலர்அ தற்கு. 115**

**இ.ள் :** *அவருடைய திருக்கரத்திலே ஒரு புத்தகம் இருந்தது. 'சபையோர்கள் அவரைப் பார்த்து நீவிர் யார்? எங்கிருந்து வருகின்றீர்? உமது கையில் இருக்கும் புத்தகம் என்ன புத்தகம்?' என்றவாறு விசாரித்தனர்.*

**நகருறு சோழ தேச நாமிருப் பதுநீர் கேட்ட**
**துகளிலிம் முறைதான் வீர சோழிய மென்றார் அக்காற்**
**றகவொடு முன்னை வைகற் றடுத்தநா வலர்வி ரைஇச் சென்று**
**அகநிறை யவாவி னோடும் அம்முறை தன்னை வாங்கி. 116**

**இ.ள் :** *அதற்கு, 'நாம் இருப்பது சோழநாடு, இந்தப் புத்தகத்தின் பெயர் வீரசோழியம் என்பதாகும்' என்று வந்தவர் பதில் கூறினார். அதைக் கேட்டவுடன் முதல் நாள் தடை கூறிய புலவர் விரைந்து சென்று அப்புத்தகத்தை ஆசையோடு வாங்கினார்.*

---

1. திருமுடிச் சாத்து-தலைப்பாகை.

[1]பையுளை யகற்றுஞ் சந்தி படலத்திற் பதினெட் டாகுஞ்
செய்யுளைப் படித்து ணர்ந்து திகடசக் கரம தென்னு
மெய்யுறு புணர்வி னுக்கு விதியதி லிருத்த றோர்ந்து
மையில்விம் மிதத்தி னோடு மகிழ்ச்சியு முற்று நின்றார். 117

**இ.ள் :** *அதில் சந்திப்படலத்தின் பதினெட்டாவது செய்யுளை நன்றாகப் படித்து உணர்ந்தார். அப்பாடலில் 'திகடசக்கரம்' என்ற சொல் புணர்ச்சிக்கான விதி இருந்தமை கண்டு விம்மிதம் அடைந்தார்; எல்லையற்ற மகிழ்ச்சியடைந்தார்.*

### வீரசோழியம் – சந்திப்படலம் – 18ம் செய்யுள்

*"நான்கொடு மூன்றொன்ப தாமுயிரின் பின்பு நவ்வருமேல்
ஏன்ற ஞகாரம தாம்பதி னைந்தினோடு எண்ணிரண்டாய்த்
தோன்று முடற்பின் தகாரம் வரின்இரண் டும்ஒருகால்
ஆன்ற வைந்தாமுடலாம் முன்பின் ஒற்றுக் கழிவுண்டே."*

உற்றவே னையமூத் தோரும் ஒருவர்பின் னொருவராக
மற்றதை வாங்கிப் பார்த்து மகிழ்வுவிம் மிதமு முற்றார்
பற்றுள சோழ தேசப் பாவலர் கச்சி யப்ப
முற்றறி குரவர் கையின் முடிவிலம் முறையை யீந்து. 118

**இ.ள் :** *கூட்டத்தில் இருந்த அனைவரும் ஒவ்வொருவராக அதனை வாங்கிப் படித்து மகிழ்ந்து ஆச்சரியமடைந்தனர். பின் அச்சோழ தேசத்துப் புலவர் அப்புத்தகத்தைக் கச்சியப்பருடைய கையில் கொடுத்தார்.*

இறுதி யினூல்க ளெல்லா மியல்புட னுணர்ந்து மெய்ம்மைப்
பெறுதியுற் றங்கண் மேய பேரவை யோரை நோக்கி
யுறுதடை நீவிர் கொண்டது ஒழிந்ததாது ஒழிந்ததா வென்று
அறுதியி லடுக்கிற் கூறி யவ்விடை மறைந்து போனார். 119

---

1. வீரசோழியத்துச் சந்திபடலத்திற் 18-ம்செய்யுள் :
"நான்கொடு மூன்றொன்ப தாமுயி ரின்பின்புநவ்வருமேல்,
ஏன்ற ஞகாரம் தாம்பதினைந்தினொ டெண்ணிரண்டாய்த்
தோன்று முடற்பின் றகாரம் வரினிரண்டும்மொருகால்,
ஆன்றவைந் தாமுட லாமுன்பி லொற்றுக் கழிவுமுண்டே".

*இ-ள் : பின்பு அச்சபையோரைப் பார்த்து, "உங்களுக்கு ஏற்பட்ட ஐயம் ஒழிந்ததா ஒழிந்ததா" என்று கேட்டுவிட்டு அக்கணமே மறைந்தருளினார்.*

அக்கண மதனிற் கச்சி யப்பமெய்க் குரவர் தம்மைப்
புக்கடை மலநீக் கித்தன் பொன்னடிக் கடிமை கொண்ட
செக்கர் மெய்ய றுமுகத்துச் சேய்பெருங் கருணைப் பேற்றைத்
தொக்க தம்மனதிற் றங்கித் தோன்றிட வுன்னி யுன்னி. 120

*இ-ள் : அப்போது கச்சியப்பர் தம்மை மலம்நீக்கித் தன் பொன்னடிக்கு அடிமையாகக் கொண்ட ஆறுமுகப்பெருமானுடைய கருணையை எண்ணி மனம் உருகினார்.*

நிரலுறும் அங்க மெல்லா நெக்குநெக் குருக வே[1]தா
வரமிக விதிர்வி திர்ப்ப மயிர்க்குழி தொறுநீர்த் துள்ளி
[2]கரகர வுதிப்பத் தூம்பிற் கதித்தல்போல் இன்பக் கண்ணீர்
பரவுறப் பரமா னந்த பரவச ராகி யுற்றார். 121

*இ-ள் : அவருடைய உள்ளம் உருகியது. உடல் விதிர் விதிர்ப்புற்றது. ஆனந்தக் கண்ணீர் பெருகியது. பரமானந்த பரவசராகி நின்றார்.*

அப்பொழுது அவையோர் ஆரும் அன்புடன் இங்கு வந்த
திப்பிய கவிஞர் வானஞ் செறிதரு குமர கோட்டத்
தொப்பிலெம் பெருமான் செவ்வே லொளிர்கரத் தொருவ னென்றே
துப்புறத் துணிந்து தீராத் தொடர்புள் ஆச்சரிய முற்று. 122

*இ-ள் : அவையோர்கள் அனைவரும் இங்கு வந்து நமது ஐயத்தைப் போக்கிய புலவர் குமரகோட்டத்து முருகப்பெருமானே என்று ஆச்சரியமடைந்தனர்.*

வெயிலிடை வெண்ணெய் போல மிகக்கசிந் துருக நெஞ்ச
எயிலுரோ மஞ்சி லிர்ப்ப மிளிர்குறு வேர்வை கொள்ளச்
[3]செயிரக லருவி போலச் செறியவா னந்தக் கண்ணீர்
பயிலுமா னந்தக் கூத்துப் பரிவுட னாடி யாடி. 123

1.தாவரம்-உடம்பு. 2.கரகர-ஓர் ஒலிக்குறிப்பு. 3.செயிர்-குற்றம்.

*இ-ள் : வெயிலிடைப் பட்ட வெண்ணெய் போல உருகினர்; உரோமம் சிலிர்த்தனர்: உடம்பில் குறுவேர்வை உண்டானது; ஆனந்தக் கண்ணீர் சொரிந்தனர்; அன்போடு ஆனந்தக்கூத்து ஆடினர்.*

[1]குணிப்புள் சீர்க்கச்சி யப்ப குருமகி மையைநன் கோர்ந்தே
யணிப்புளங் கவர டிக்கீழ் அடியற்ற மரம்போல் வீழ்ந்து
பணிப்புடன் வணங்கி யந்தப் பரமவான் குருவைச் [2]சோத்தம்
பிணிப்புறச் செய்தார் நெஞ்சம் பெருகு மெய்யன்பி னோடும். 124

*இ-ள் : மதிப்புமிக்க கச்சியப்ப குருவின் மகிமையை நன்குணர்ந்து அவருடைய திருவடியின்கீழ் அடியற்ற மரம்போல் வீழ்ந்து வணங்கி உள்ளன்போடு தம் வணக்கத்தைத் தெரிவித்தனர்.*

அடையலர்ச் செகுத்த வைவேல் அறுமுகத் திறைமு னுற்ற
நடைபெறு மவைக்கண் வைகி நலனுறத் தடுத்த [3]சூரி
புடையமர் கச்சி யப்ப புனிதமெய்க் குரவர் தம்மை
யுடைமை யின்போடு பல்கா லுறமிகத் தொழுதல் செய்து. 125

*இ-ள் : சூரன்பன்பன் முதலான அசுரர்களைத் தண்டித்த வேலாயுதத்தை உடைய முருகப்பெருமான் திருமுன்பாக நடைபெற்ற அவையில் தடைகூறிய புலவர் கச்சியப்ப சிவாசாரியரை அன்போடு பலமுறை தொழுது.*

[4]புன்னிக ரெம்பி ரானே புழுத்துலை நாயினுங் கீழ்
மன்னிய தமிய னேன்சு வாமிகண் மகிமை தன்னிற்
[5]தன்னமு மெண்ணா தாற்றுந் தடைப் பெருங்குற் றந்தாங்கிச்
சின்னவிவ் வடியன் மீது திருவருள் புரிக வென்று. 126

*இ-ள் : "கல்வியிற் புலி போன்ற எம்பெருமானே! நான் புழுத்தலை நாயினும் கீழானவன். தேவரீருடைய மகிமையில் சிறிதும் அறியாமல் தடைகூறிவிட்டேன். அக்குற்றத்தைப் பொறுத்துக் கொண்டு எனக்குத் திருவருள் புரிய வேணும்" என்று.*

---

1.குணிப்பு-மதிப்பு. 2.சோத்தம்-இழிந்தோரஞ்சலி. 3.சூரி-புலவர்.
4.புல்-புலி, 5.தன்னம்-அற்பம்.

அதிவிந யத்தின் வேண்டி யடியற்ற மரம்போன் மீட்டும்
பதியவீழ்ந் தேகி டந்தார் பார்த்தவக் கச்சி யப்ப
முதிரருட் குருவெ ழூஉவம் மொழி[1]புத ரிரண்டு கையுந்
துதியுடங் கரத்திற் பற்றித் தூக்கிமெய் யிறுகப் புல்லி. 127

இ.ள் : *அதிக விநயத்தோடு வேண்டி அடியற்ற மரம்போல விழுந்து வணங்கினார். அவரைப் பார்த்த கச்சியப்பர், வணங்கிய புலவரை எழுப்பி இரண்டு கரங்களால் தழுவி...*

[2]அடைவுளிவ் வவையோர் யார்க்கு மையரே தாங்கள் அற்றுந்
தடையினா லன்றோ வுண்மைத் தண்ணளி வெளிப் பட்டன்றால்
உடைவி லிங்கியற்று கைம்மா றுதன்பொருட் டியாது தங்கட்கு
[3]இடையலின் றறியே மென்சொ [4]லிரண்டிசை இப்புகழ்ந்து கொண்டார்.
128

இ.ள் : *"தாங்கள் இப்படித் தடைகூறிய காரணத்தினால்தான் முருகப்பெருமானுடைய கருணை வெளிப்பட்டது. ஆதலால் தாங்களுக்கு அடியேன் செய்யும் கைம்மாறு அறியேன்" என்று புகழ்ந்தார்.*

வேறு.

ஆங்கதன் பின்பவை யண்ணியுறுந்
தாங்களெ லோர்களுந் தாழ்வொடுதண்
தேங்கமழ் தாதுறு செங்கமலப்
பூங்கழல் சென்னி பொருத்தியரோ. 129

இ.ள் : *அதன்பின் அருகே நின்ற அனைவரும் கச்சியப்பருடைய தேன் பொருந்திய தாமரை போன்ற திருவடிகளில் விழுந்து வணங்கினார்கள்.*

போற்றடை வுள்ள புராணமரங்
ஏற்றவி னித்தடை யின்றிமல
மாற்றணை வுற்றசு வாமிகளே
[5]தோற்றர வோடு தொடங்குகவே. 130

---

1.புதர்-புவலர். 2.அடைவு-முறைமை. 3.இடையல்-மெலிவு.
4.இரண்டிசைஇ-இருதரங்கூறி. 5.தோற்றரவு-தோற்றம்.

*இ.ள் : "ஆணவம் கன்மம் மாயை ஆகிய மூன்று மலங்களை மாற்றி அனுக்கிரகம் பண்ண வந்திருக்கும் சுவாமியே! இனித் தாங்கள் புராணத்தை அரங்கேற்றம் செய்வதற்கு எவ்விதத் தடையும் இல்லை. நீங்கள் புராணத்தைத் தொடங்குங்கள்".*

**என்று[1]வி ணாண மியற்றினர்பின்**
**கன்றலில் சீர்பெறு கச்சியப்ப**
**நன்றுறை மெய்க்குரு நாதனங்ஙன்**
**[2]நின்றக வோடுஅரங் கேற்றுவரால்.** 131

*இ.ள் : என்று விண்ணப்பஞ் செய்து வேண்டினார்கள். அது கேட்ட கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள் சிறிதும் மனம் வருத்தம் இல்லாமல் இனிய தன்மையோடு கந்தபுராணத்தை அரங்கேற்றம் செய்யத் தொடங்கினார்.*

**[3]சீதமுண் மாமதி சேர்சடையோன்**
**போதமுள் காஞ்சி புரத்துளருண்**
**மாதடை ஆதிசை வர்களடி**
**யாதலை மேவுத லானவர்க்கும்.** 132

*இ.ள் : குளிர்ச்சி பொருந்திய சந்திரனைச் சடையிலே தரித்துக் கொண்ட சிவபெருமான் அருள் நிலவும் காஞ்சி நகரத்தில் உள்ள சத்திநிபாதம் (அருட்சத்தி பதிவு) பெற்ற ஆதிசைவர்களை முதலாகக் கொண்ட ஏனைய அடியார்களுக்கும் ...*

**வேதியர் போற்றயில் வேன்முருகன்**
**யூதியுள் கந்த புராணகதை**
**தீதிறு தங்கள் செவிக்கொளவே**
**[4]போதியை தொண்டரெண் போயினர்க்கும்.** 133

*இ.ள் : வேதவித்துக்களால் வணங்கப்படுகின்ற வேலாயுதக் கடவுளாகிய முருகப்பெருமானுடைய அருள்ஒளி வீசும் கந்தபுராணத்தைச் செவிமடுக்கும் அனைவருக்கும் (வேறு ஊர்களில் இருந்து வரும் அடியார்களுக்கும்.)*

---

1. விண்ணாணம்-நாகரீகம். 2.இன்றகவு-இனியதகுதி. 3. அருட்சத்தி பதிந்த ஆதிசைவரை முதலாகக் கொண்டஏனையர்க்கும். 4.போதியை தொண்டர்-வந்த அடியார்கள்.

அயிலுண வாதிய வவையெல்லாம்
இயலந டந்தன வேதொண்டை
நயனுறு நாட்டுஅறு நாற்கோட்டத்து
உயர்வுறு மேழிய ரொண்செலவால். 134

*இ.ள் : உணவு முதலான அனைத்து உபசாரங்களும் தொண்டை நாட்டின் இருபத்து நான்கு கோட்டங்களில் வசிக்கும் உயர்வுற்ற வேளாளர்களால் நிகழ்த்தப் பெற்றன.*

அவையதின் மிக்க அவாவினொடுங்
குவைபெற யாவருங் கூடிமரீஇ
நவையறு செஞ்சடை நாதனுரை
செவைமுறை யோடு செவிக்கொளவே. 135

*இ.ள் : எல்லோரும் மிகுந்த ஆர்வத்தோடு வந்து கூடியிருந்து சிவந்த சடையை உடைய சிவபெருமானுடைய புகழைப் பறைசாற்றும் கந்தபுராணத்தை நியமமோடு கேட்டு மகிழ்ந்தனர். (இப்புராணம் முருகப்பெருமானுடைய அருள்வரலாறு என்றாலும் சிவபரத்துவம் மிகுதியாகப் பேசப்படுகின்ற புராணம் என்பது குறிப்பிடத் தக்கது.)*

மருவிய நாடொறும் வாசித்துப்
பொருளுரை செய்த புராணமதைக்
கருவறு தேசிகர் கச்சியப்பர்
ஒருவரு டத்தி னுறமுடித்தார். 136

*இ.ள் : இப்படியாகக் கச்சியப்ப சிவாச்சாரிய சுவாமிகள் கந்தபுராணச் செய்யுள்களை வாசித்துப் பொருள் விளக்கம் செய்து ஒருவருடத்தில் நிறைவு செய்தார்.*

## வேறு.

பெறுபுகழ்ப் புராண முற்றுப் பெற்றவக் கணத்திற் செவ்வேள்
அறுமுக னருள்சேர் கச்சி யப்பமெய்ப் பரம வாசான்
உறுதிருப் புராணந் தீட்டு மொளிவளர் முறையை நூலின்
[1]நிறுவிதிப் படியர்ச் சித்து நிலனுற வணங்கி னாரால். 137

1. நிறுவிதி - நிறுவியவிதி.

*இ.ள் : புகழ்பெற்ற கந்தபுராணம் முழுவதும் நிறைவு பெற்ற பின் முருகப்பெருமான் அருள்பெற்ற கச்சியப்ப சிவாசாரியர் அப்புராணத்தை முறைப்படி அருச்சனை செய்து அட்டாங்க நமஸ்காரம் பண்ணினார்.*

**அப்பொழுது அங்க ணுள்ள அனைவரும் அன்பி னோடு**
**மெய்ப்பட விம்மி விம்மி விழுந்துதண் டென்னத் தெய்வத்**
**துப்பமர் கச்சி யப்ப தூயநற் குரவர் தம்மைச்**
**செப்புமிக் கவாவுட் கொண்டு செவ்விதிற் றொழு தெழுந்தே. 138**

*இ.ள் : அப்போது அங்கிருந்த அனைவரும் விம்மி விம்மி ஆனந்தக் கண்ணீர் சொரிந்து கச்சியப்ப சிவாசாரியாரைப் பணிந்து தண்டாகாரமாக விழுந்து வணங்கினர்.*

**இருகர முச்சி யேறி யியைதரக் குவிய நின்றே**
**அருமையிற் துதித்தார் கச்சி யப்பட் டார கர்சீர்ப்**
**பொருவின் மெய்ப்பொருள் சேர்கந்த புராணநன் முறையி னோடு**
**திருமலி வளஞ்சேர் தந்தச் சிவிகையி லெழுந்து வைகி. 139**

*இ.ள் : பின்பு எழுந்து நின்று இருகரங்களையும் உச்சியிற் குவித்து நின்று தோத்திரம் பண்ணி, கச்சியப்பரையும் அவர் செய்த புராணத்தினையும் அழகு பொருந்திய தந்தச் சிவிகையில் எழுந்தருளுவித்து.*

**நலனுறு தொண்டை நாட்டின் நால்அறு கோட்டத் துற்ற**
**வலனுறு மேழிச் செல்வ வளமையோர் நானஞ் செய்து**
**குலனுறும் இரண்டு டுத்துக் குறைவில்வெண் ணீறுபூசிப்**
**பொலனுறு கண்ம ணிப்பூண் பூண்டுலாம் அவர்க ளுள்ளே. 140**

*இ.ள் : நலஞ்சிறந்த தொண்டை நாட்டின்கண் இருபத்து நான்கு கோட்டத்தில் வாழும், இரண்டு வஸ்திரம், திருநீறு உருத்திராக்கம் பூண்டு விளங்கும் வேளாளர்களில்.*

**சிலர்எழிற் சிவிகை தாங்கச் சிலர்இணைக் கவரி சாய்ப்பச்**
**சிலர்விரி குடைபி டிக்கச் சிலர்நெடுங் கொடியெ டுப்பச்**
**சிலர்மலர் மாரி சிந்தச் சிலர்மயில் வட்டம் வீசச்**
**சிலர் முத்துப்பந்தரேந்தச் சிலர் பகல்விளக்குத் தூக்க. 141**

*இ.ள் : சிலர் சிவிகையைத் தாங்கவும், சிலர் கவரி வீசவும், சிலர் குடை பிடிக்கவும் சிலர் கொடி எடுக்கவும், சிலர் மலர் மாரி சிந்தவும், சிலர் மயில் வட்டம் வீசவும், சிலர் முத்துப் பந்தல் தாங்கவும், சிலர் பகல் விளக்கு ஏந்தவும்.*

**தண்ணுமை முரசு பேரி சல்லரி திண்டி சங்க**
**மண்ணுறு குடமு ழாப்பொன் வயிர்துடி படகம் பீலி**
**பண்ணுதொண் டகமுன் னாகப் பகருமங் கலவி யங்கள்**
**செண்ணுநல் லார்ப்பிற்றிக்கிங் கனைத்துமே நவிடு கொள்ள. 142**

*இ.ள் : தண்ணுமை, முரசு, பேரி, சல்லரி, திண்டி, சங்கம், குடமுழா, வயிர், துடி படகம், பீலி, தொண்டகம் முதலான மங்கல வாத்தியங்கள் திசைகளனைத்தும் செவிடுபடும்படியாக முழங்கவும்.*

**நடைபெறு தமக்கு [1]முன்னூ னவிலுநன் முந்நூன் மார்பேற்று**
**அடைவுறு வொழுக்கம் பூண்டவரு மறைக் கிழவர் யாருங்**
**கிடைகிடை யாகக் கூடிக் கிளர்புனற் கங்கை சூடுஞ்**
**சடையவ னருளும் வேதத் தனிமொழி யோதிச் செல்ல. 143**

*இ.ள் : நூலின்படி நல்லொழுக்கத்தில் ஒழுகும் முந்நூல் அணிந்திருக்கும் அந்தணர்கள் கிடைகிடையாகக் கூடி, கங்கை சூடிய பெருமான் அருளிய வேதங்களை ஓதிச்செல்லவும்.*

**சரவண பலவி சாக சண்முக கார்த்தி கேய**
**குரவகாங் கேய கந்த குககிர வுஞ்ச தார**
**வரகும ரசிகி வாக அமரசே னாதி பவ்வென்று**
**உரனுறப் பரமன் றொண்ட ருரைசெய் பேரொலி தழைக்க. 144**

*இ.ள் : சிவபெருமானுடைய தொண்டர்கள் எல்லாரும் சரவணபவ, விசாக, சண்முக, கார்த்திகேய, குரவ, காங்கேய, கந்த, குக, கிரவுஞ்சதார, அரகுமர, சிகிவாகன, அமரசேனாதிப என்று முழங்குகின்ற பேரொலி எங்கும் நிறையவும்.*

---

1. முன்னூல்-வேதம்.

உருவளர் நகர்கட்கு எல்லாம் உத்தம மாகுங் காஞ்சித்
திருநகர் அமர்வோ ரந்தத் திருநகர் வீதி தோறு
மருவுநற் சுத்தி செய்து வரைபொளி யுளிநேர் பைங்காய்ப்
பொருவி னெட்டிலை யரம்பை பொலிவுற வகுத்து நாட்டி. 145

*இ.ள் : நகரங்களில் எல்லாம் தலைசிறந்த காஞ்சிமா நகரில் உள்ள மக்கள் வீதிகள் தோறும் தூய்மை செய்து பாக்கு மரங்கள் வாழை மரங்கள் முதலானவற்றை நிறுத்தி.*

வாரண மிடற்றுச் செந்தா மரைமலர் முகத்துச் செவ்வாய்ப்
பூரண கும்பக் கொங்கைப் புனிதையர் இடையிற் கட்டு
மேரண வியபொற் பல்கா சிலங்குமே கலையை யொப்பாந்
தோரண வகைகள் எல்லாந் தொகைபெறத் தொகுத்தல் செய்து.
146

*இ.ள் : சங்குபோன்ற கழுத்தையும் தாமரை போன்ற முகத்தையும், சிவந்த வாயினையும், பூரண கும்பம் போன்ற கொங்கைகளையும் உடைய பெண்கள் இடையிற்கட்டும் மேகலையைப் போன்ற பொற்காசுகள் அமைந்த தோரணங்கள் பலவற்றை நிலைநிறுத்தி.*

மல்லிகை செருந்தி முல்லை வகுளம்வெண் சாதி நீலம்
பல்லிதழ்க் கஞ்சம் புன்னை பாதிரி கோங்கு பட்டி
மெல்லிய பாரி சாதம் விரிமடற் கொன்றை முன்னாச்
சொல்லிய மலர்ப்பூ மாலை துணையுற அமைத்துத் தூக்கி. 147

*இ.ள் : மல்லிகை, செருந்தி, முல்லை, வகுளம், சாதி, நீலம், தாமரை, புன்னை, பாதிரி, கோங்கு, பட்டி, பாரிசாதம், கொன்றை முதலான மலர்களால் மாலைகள் தொங்கவிட்டு.*

திலவிடை வெளியுற் றெய்தத் திரிவெண் ணூல்சுற்றி மாவின்
நலவிளந் தளிர மைத்து நாரிகே ளத்தி னோடு
பொலனுறு கூர்ச்சஞ் சேர்த்துப் பொற்பரி வட்டஞ் சாத்திக்
குலவுபூ ரணகும் பங்கள் குவைபெற அமைத்து வைத்து. 148

*இ.ள் : எள்ளின் அளவாக இடைவெளிவிட்டு வெண்ணூலை முறையாகச் சுற்றி, மாந்தளிர் தேங்காய் தருப்பை இவற்றை மேற்பாகம் வைத்து பரிவட்டம் சாத்திப் பூரண கும்பங்களை அமைத்து.*

சிறையளி மிழற்றிச் சூழச் செறிந்தபல் கோட்டின் மென்மை
யுறைதளிர் விரித்துக் கானத் துற்றபுன் குதிர்க்கும் வெண்மை
நிறைமலர் பொருவு செந்நெ னெகிழ்திரி பாக்க மென்றே
அறைபொரி பொன் வள்ளத்தி லமைத்துப்பின் னெடுத்துத் தூவி. 149

இ-ள் : கானகத்தில் பல கிளைகளோடு தளிர் விட்டு, வண்டுகள் சூழும்படி புன்கு மரங்கள் பூக்களை மலர்வித்து உதிர்க்கின்றன. அந்தப் பூக்களைப் போலச் செந் நெற்பொரியைப் பொன் வெள்ளத்தில் எடுத்து வைத்துக் கொண்டு தூவி.

மணிபெறு கம்ப தீப மறுவில்பொன் னிரத தீபம்
எணிலெழி லடுக்குத் தீப மியைசர தீபந் தூக்குத்
தணிவினற் றீப மற்றைத் தழங்குகைத் தீப மாதி
யணிபெறு தீப மேற்றி யறுகினை யெடுக்க மாதோ. 150

இ-ள் : கம்ப தீபம், இரத தீபம், அடுக்கு தீபம், சரதீபம், தூக்குத் தீபம், கைத்தீபம் முதலான தீபங்கள் மற்றும் அறுகு இவற்றைத் தாங்கவும்.

நிலவுதம் முருவிற் பூதி நிறையவுத் தூளஞ் செய்து
பலமுர மிருதோ ளாறும் பகருமற் றையவி டத்தின்
இலகுறு மொன்று மாய விறைவிரல் அளவ ணிந்த
நலதிரி புண்ட ரத்தி னயமுள்வெண் பொலிவார் பொற்பும். 151

இ-ள் : மேனியில் திருநீற்றை உத்தூளணம் செய்து, மார்பு, தோள்களில் 6 அங்குல அளவிலும் மற்ற இடங்களில் ஒரு அங்குல அளவிலும் திரிபுண்டரம் தரித்து நின்ற அழகும்.

சிகைசிரஞ் செவிநற் கண்டந் திகழ்கர மணிக்கட்டாக
[1]முகையக லத்து லாவும் உபவீதம் இவற்ற டைவே
நகைபெறும் ஒன்றொடு ஒன்பான் நான்கொரா றெண்ணான்குஈரெட்டு
[2]தகையிரா றொளிர்நூற் றெட்டொன் றடையக்க மாலைச்சீரும். 152

இ-ள் : சிகை, சிரம், செவி, கழுத்து, கரம் மணிக்கட்டு மார்பு, உபவீதம் இவற்றில் முறையே ஒன்று இருபத்துநான்கு, ஆறு, ஒன்று பதினெட்டு, பன்னிரண்டு, முப்பத்திரண்டு, நூற்றெட்டு நீண்ட உருத்திராக்க மாலைகளின் அழகும்,

1. உகை-வளர்ச்சி. 2.அகை-எழுச்சி.

[1]மிருத்தியு மாயை கன்மம் வேறுபட் டொழிய முக்கட்
கருத்தன தெழின் மலர்த்தாட் கண்ணுயி ரடங்குந் தன்மை
யிருத்தலித் தன்மை யென்றே யிலங்கறி வுயிர்கட் கெல்லாந்
திருத்துறப் பருவிற் காட்டுஞ் சின்முத்தி ரையினற் சீரும். 153

இ.ள் : மிருத்தியுவான ஆணவம், மாயை, கன்மம் ஆகிய மூன்று மலங்களும் வேறுபட்டொழியச் சிவபெருமானுடைய திருவடி நிழலில் ஆன்மா ஒன்றும் தன்மையை உணர்த்துகின்ற சின்முத்திரையின் சீரும்,

பொருவினல் லருட்க ணின்று பொழிதரு பரமா னந்த
மருவுறு புனலுங் கண்டு மறுவில்பல் லடியர் மெய்ம்மை
நிருமல மாகு முள்ள நெக்குநெக் குருக வந்தே
யருகுற வணங்கிப் போற்றி யானந்தக் கூத்தங்காட. 154

இ.ள் : அருட்கண்களில் இருந்து பொழிகின்ற பரமானந்தக் கண்ணீர் மழையையும் கண்டு மெய்யடியார்கள் உள்ளம் நெக்குருக வந்து வணங்கிப் போற்றி ஆனந்தக் கூத்தாடவும்,

பலமு[2]ளா மோத மல்கிப் பராய்ச்செறி தரவே நாலெட்டு
அலகொடு மரீஇயெஞ் ஞான்றும் அன்புட னியற்றப் பெற்ற
நலமுதொல் லறங்க ளெல்லா நகுபுகழ் மிகக்கொண் டுற்று
வலமுடன் நிலவவ் வீதி வளாகத்து வலஞ்செய் தாரால். 155

இ.ள் : மிகுந்த மகிழ்வுடன் புராண ஆசிரியரை வணங்கி முப்பத்திரண்டு வகையான தருமங்கள் இயற்றப்பெற்ற காஞ்சி நகர வீதியை வலஞ்செய்து வந்தனர்.

மணிமிளிர் தருபொன்வீதி வலஞ்செய்துகுமர கோட்டத்து
அணியுறு சந்நி திக்கண் அடைந்துபொற் சிவிகை நின்றுந்
திணிபெறு புவிக்கி ழங்கித் திருமுறை யதனைக் கோயிற்
றுணிவுளுட் கொண்டு சென்று துதிதிருமுன்னர் வைத்தார். 156

இ.ள் : வீதிவலஞ் செய்த பின் புராண ஆசிரியரோடு குமரகோட்டத்தில் முருகப்பெருமானுடைய சந்நிதானத்தை அடைந்து, அத்திரு முறையைக் கொண்டு போய்த் திருமுன்னர் வைத்தனர்.

---

1. மிருத்தியு-ஆணவம். 2. ஆமோதம்-உவகை.

**அக்கணம் எவருங் கச்சி யப்பவா சிரியர் தம்மை**
**மைக்கரு வகற்ற னோர மையும்மை யும்மென் றன்பின்**
**மிக்குரை புரியும் போதும் விடுதலின் றாரா மையாற்**
**றொக்குபல் காலு முண்மை துலங்குற வணங்கி நின்று. 157**

**இ.ள் :** *அக்கணம் எல்லோரும் கச்சியப்ப சிவாச்சாரிய சுவாமிகளைத் தம்முடைய பிறவித் துன்பம் தீரும்படி வணங்கினர். அமையும் அமையும் என்று கூறியும் ஆர்வம் மிகுதியாற் பல்காலும் வணங்கி நின்றனர்.*

**பெருகு அருள்நிதியாம் எங்கள் பெருமஇத் தமிழ்நாட்டி யாருந்**
**திருவுட னுய்யக் கூறுந் திறனுளிப் புராண மான**
**பொருவில் வானமிர் தெங்காதாம் புகரில் வாய்மடுத்தி யாங்கள்**
**இருளற வுய்ந்தேம் உய்ந்தேம் எனவுரைத் தின்ப முற்றார். 158**

**இ.ள் :** *''பெருகும் அருள்நிதியாகிய பெருமானே! இத்தமிழ் நாட்டில் எல்லாரும் உய்வதற்காகக் கூறப்பட்ட இக்கந்த புராணமான அமிர்தத்தை நாங்கள் அருந்தி இன்பமுற்றோம்'' என்று எடுத்துரைத்தனர்.*

**இயலுணா டெங்கு மேவி யியைசிவ னடியர் யாரு**
**நயமுளக் காந்தந் தன்னை நன்குபா ராட்டி யன்பு**
**பயிலுறப் பொறிப்போர் கேட்போர் பாடுவோர் உரைசொல்வோர்**
**வுயர்பொருட் சுவைசொல் லின்போர்ந் துறுமின்பச் செல்வமுற்றார்.**
**159**

**இ.ள் :** *நாடெங்கும் சிவனடியார்கள் காந்த புராணத்தை நன்கு புராணத்தை நன்கு பாராட்டி அதனைப் படிஎடுத்தும் பாடியும் கேட்டும் உரைகூறியும் சொற்சுவை பொருட் சுவைகளை அனுபவித்தும் இன்பமாகிய செல்வத்தை அடைந்தனர்.*

**பின்னொர் நாட்கச்சி யப்பப் பெருந்தகைக் குரவர் தன்றாண்**
**முன்னு மாணவர் கட்கெல்லா முதல்வர் கோனேரி யப்பர்**
**என்னு மாணவரை நோக்கி யாம்புகழ் காந்தத் தேழாய்**
**மன்னு உபதேச காண்டம் வண்டமிழ்ப் படுத்துக என்றார். 160**

**இ.ள் :** *பின்பு ஒருநாள் கச்சியப்ப சிவாசாரியர் தனது திருவடியை எண்ணி வணங்கும் மாணவர்களில் முதன்மையான வராகிய கோனேரியப்பரை நோக்கி, ''காந்தத்தின் ஏழாவது*

*பகுதியான உபதேச காண்டத்தைத் தமிழ்ப்படுத்துக'' என்று அருளினார்.* *160*

ஆயபோதவர்தம்பாதப் போதினிலன்பிற்றாழ்ந்தே
மேயவக்காந்தத்தேழாய் விரியுபதேசகாண்டம்
பாயதொல்புவியில்யாண்டும் பரவுறும்புகழின்மேவத்
தூயதீந்தமிழிற்சொற்றார் துலங்குகோனேரியப்பர். 161

*இ.ள் : அப்போது கோனேரியப்பர் கச்சியப்ப சிவாசாரிய ருடைய திருவடிகளை நமஸ்காரம் செய்து, அவரது ஆக்ஞைப்படி காந்தத்தின் ஏழாவது காண்டமான உபதேச காண்டத்தைத் தமிழிலே மொழி பெயர்ப்புச் செய்தார்.*

அலரருள் வடிவாங் கச்சி யப்பமெய்க் குரவர் பின்னுஞ்
சிலபகல் குமர கோட்டஞ் செறிந்திடு மயில்வே லண்ணன்
மலரடிப் பூசை செய்து மறுவின்மெஞ் ஞானநிட்டை
நலனுறப் புரிந்து மங்ஙன் நண்ணினர் இருந்து மாதோ. 162

*இ.ள் : அருள்வடிவாகிய கச்சியப்ப மெய்க்குருநாதர் வழக்கம் போல் குமரகோட்டத்து முருகப்பெருமானுடைய திருவடியைப் பூசித்து ஞான நிட்டையிலே இருந்தார்.*

மங்கலத் துறு[1]ம்இ டாடி மந்தல ரிழிக்குஞ் செம்மை
யங்கமு ளருணப் புத்தே ளணிமக ரத்தி னின்றி
யங்கவுற் றிடு[2]கரீ ரமென்றனை வோருங் கூறத்
திங்களி னுருவ மூன்று திகழ்திருத் திங்க ணாளில். 163

*இ.ள் : மாதுளம் பூவைப் பழிக்கும் சிவந்த நிறத்தை உடைய சூரியபகவான் மகரத்தினின்று இயங்கும் உத்தராயண காலத்தில் மாசிமாதத்தில் மூன்றுகண்கள் போலத் திகழும் மிருகசீரிட நாளில்...*

நிறைதரும் அகண்டா கார நித்தவி யாப கத்தோடு
அறையுமெய் யறிவா னந்த வாகமாய் நின்ற முக்கண்
இறையவ னயன்மா யாவர்க்கும் அரிய னாகி
யுறைசிவ பிரானொடு ஒன்றி யொன்றுறா வொன்று பெற்றார். 164

1. இடாடிமம்-மாதுளை. 2. கரீரம்-கும்பராசி

இ.ள் : பூரண நிறைவைத் தரும் அகண்டாகார நித்திய வியாபகத்தோடு சக்ஷிதானந்த மயமாகி பிரம விஷ்ணுமுதலான யாவர்க்கும் அரியவராகி விளங்கும் சிவபெருமானோடு ஒன்றி ஒன்றுறா நிலையினை அடைந்தார்.

**சிவனடி யவரை யந்தச் சிவனருளி லீலை தம்மைத்**
**தவமலி சேக்கி ழாருந் தகுபரஞ் சோதி யாருங்**
**கவனம தியற்ற வல்ல கருத்தர் மற்றவர் போற்கந்தன்**
**உவமையில் புராணங் கூறற் குரியவர் கச்சி யப்பர். 165**

இ.ள் : சிவனடியார்களுக்காகச் சிவபெருமான் செய்தருளிய லீலைகளைச் சேக்கிழாரும் பரஞ்சோதியாரும் புராணங்களாகப் பாடித் தந்த புராண கர்த்தர்கள். அவர்களைப் போல உவமை யில்லாத புராணத்தைப் பாடியவர் கச்சியப்பர்.

## வாழ்த்து.

**அறுமுகப் பெருமான் வாழ்க அவன்மருங்கு அணங்கார் வாழ்க**
**வுறுகரத் தயிலும் வோங்கெழின் மயிலும் வாழ்க**
**குறுகில்குக் குடமும் வாழ்க [1]குகனுள்பல் லிடமும் வாழ்க**
**நூலினற் காஞ்சி வாழ்க வாழ்கசீர்க் குமர கோட்டம். 166**

இ.ள் : ஆறுமுகப் பெருமான் வாழ்க, வள்ளி, தெய்வானை அம்மையர் வாழ்க, அவன் கரத்திலே தாங்கும் வேலாயுதம் வாழ்க, அழகு பொருந்திய மயில் வாகனம் வாழ்க, கோழிக் கொடி வாழ்க, அவன் எழுந்தருளியுள்ள ஆலயங்கள் வாழ்க, குற்றமில்லாத காஞ்சி மாநகர் வாழ்க, குமரகோட்டம் வாழ்க.

**அருமறைத் தொகுதி வாழ்க சிவாகமப் பகுதி வாழ்க**
**திருவுறு சைவம் வாழ்க மறுவில்வெண் ணீறு வாழ்க**
**பொருவறு கண்டி வாழ்க புண்ணியத் தொண்டர் வாழ்க**
**கருவறு ஞானம் வாழ்க கந்தவேள் புராணம் வாழ்க. 167**

இ.ள் : வேதங்கள் வாழ்க, சிவாகமங்கள் வாழ்க, சைவ சமயம் வாழ்க, வெண்ணீறு வாழ்க, உருத்திராக்கம் வாழ்க, அடியார்கள் வாழ்க, பிறவியை மாற்றும் சிவஞானம் வாழ்க, கந்தவேள் புராணம் வாழ்க.

---

1. குகனுள் பல்லிடம்-ஆறு படைவீடுகள்.

குகனருட் கச்சி யப்ப குருபரன் வாழ்க அன்னோன்
அகமகிழ் புராணம் வாழ்க அவனடிக் கன்பர் வாழ்க
மிகவவன் புராண மெங்கும் விளம்புமெய் யடியர் வாழ்க
சகமகிழ்ந் தேத்தும் ஆதி சைவர்கள் வாழ்க வாழ்க. 168

*இ.ள் : முருகப்பெருமான் அருள்பெற்ற கச்சியப்ப குருபரன் வாழ்க அவனுடைய உள்ளம் மகிழ உரை செய்த கந்தபுராணம் வாழ்க, அவனுடைய அடியவர்கள் வாழ்க, இப்புராணத்தை எங்கும் விரிவுரை செய்யும் மெய்யன்பர்கள் வாழ்க, உலகம் மகிழ்ந்து போற்றும் ஆதிசைவர்கள் வாழ்க.*

பல்கறி வில்லேன் சொற்ற பாவமு வுற்ற தேனு
மல்கறி வுள்ளீர் அஃதை மாற்றிநீர் கொண்மின் மேன்மை
புல்கரி வெற்பங் குற்ற புள்ளுரு வொழீஇத்தன் சாய
நல்கலை யன்றி வேறா நவிற்றுவது உலகி லுண்டோ. 169

*இ.ள் : பரந்த அறிவு இல்லாத அடியேன் பாடிய பாவில் குற்றம் இருந்தாலும் நிறைந்த அறிவுடைய பெரியோர்கள் குற்றம் நீங்கி ஏற்றுக் கொள்வீர்களாக, பொன்மலையைச் சார்ந்த காக்கை பொன்னிறத்தைப் பெற்றிருத்தல் அன்றி வேறாக உலகத்தோர் கூறுவதில்லை.*

நற்றவக் கச்சி யப்ப நாதனற் காதை தன்னை
சொற்றவர் ஆராய்ந் துற்றோர் துகளுறா தன்பின் மேவிக்
கற்றவர் கற்க வுள்வோர் கசிந்துள மினிதாக் கேட்கல்
உற்றவர் இவரெல் லாரும் உயரின்பச் செல்வ ராவார். 170

*இ.ள் : நல்ல தவம் பொருந்திய கச்சியப்பருடைய காதையை எடுத்துரைத்தவர், ஆராய்ந்தவர், அன்போடு கற்றவர், இனிக்கற்க உள்ளவர்கள், உள்ளம் உருகிக் கேட்பவர்கள், இவர்கள் யாவரும் உயர்ந்த முத்தியின்பமாகிய செல்வத்தை உடையவர்கள் ஆவர்.*

வரைபக வெறிந்த வைவேல் வள்ளலின் சரித முற்றுந்
திரைதரும் அமிழ்த மென்னத் தீந்தமிழ் அதனிற் சொற்ற
வுரைபெறு கச்சி யப்ப வொருபெருங் குரவர் பாத
மரைமல ரென்றும் என்றன் மனத்தடத் தலரு மாதோ. 171

இ.ள் : மலை பிளக்கும்படியாகக் கூரிய வேலை எறிந்த வள்ளலாகிய முருகப்பெருமானுடைய சரித்திரத்தைத் திரையுடைய அமிர்தக் கடல்போல இனிய தமிழ்மொழியிலே பாடித்தந்த கச்சியப்பராகிய ஒப்பற்ற பெருமைவாய்ந்த குருநாதருடைய திருவடித் தாமரை எப்போதும் என்னுடைய உள்ளமாகிய பொய்கையில் மணம்வீசிக் கொண்டே இருக்கும்.

*கச்சியப்ப சிவாசாரியர் புராணம் முற்றுப்பெற்றது.*

*திருச்சிற்றம்பலம். ஆக விருத்தம் 171.*

*நம: குமாராய.*

## வாழ்த்து மலர்கள்

*திருச்சிற்றம்பலம்*

வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல்லாம் அரன் நாமமே
சூழ்க வையகமும் துயர் தீர்கவே.

### பாவநாசத் தலபுராணம்

பூமாது சிங்கைசெய்ய பூங்கமல மெனவாழ்க புவனியோங்க
மாமாரி பொழிகவென்று மறையவர் ஆனினம்வாழ்க வானளாவித்
தேமாரி நதிபெருகச் செழித்ததிரு முக்களவிற் சிறந்துவாழுங்
கோமானின் னருள்பெருக கொற்றவர்செந் தமிழ்ப்புலவோர்
கொழித்து வாழ்க.

### கந்தபுராணம்

வான்முகில் வழாது பெய்க மலிவளம் சுரக்க மன்னன்
கோன்முறை அரசு செய்க குறைவிலாது உயிர்கள் வாழ்க
நான்மறை அறங்கள் ஓங்க நற்றவம் வேள்வி மல்க
மேன்மை கொள் சைவநீதி விளங்குக உலகமெல்லாம்.

### திருக்குற்றாலத் தலபுராணம்

சீதமழை முகில்பொழிக தேசமெலாம் பயிர்விளைக செல்வம் ஓங்க
மாதர்குழா மக்கள்குழா மனையறங்களுடன் பொலிந்து மலிந்து வாழ்க
மேதகுசீர்ச் சைவநெறி வேதநெறி தழைத்தோங்க மேலுமேலும்
பூதலமேற் சிவபெருமான் ஆலயங்கள் பூசனைகள் பொலிகமாதோ.

## மருதவனப் புராணம்

பூவுலகு இதனுள் எங்கும் புகழுறு சுருதி வேள்வி
மேவும் ஆகமநன் னூல்கள் விளங்குக வளங்கள் நீடு
பாவுக மதிக்கோர் மூன்று பயின்மழை பொழிக நாளும்
காவிரி வருக வாரி காவலன் செங்கோல் வாழ்க.

## பரஞ்சோதியாரியற்றிய திருவிளையாடற்புராணம்

மல்குக வேத வேள்வி; வழங்குக சுரந்து வானம்,
பல்குக வளங்கள் எங்கும்; பரவுக அறங்கள்; இன்பம்
நல்குக உயிர்கட்கு எல்லாம்; நான்மறைச் சைவம் ஓங்கிப்
புல்குக உலகம் எல்லாம்; புரவலன் செங்கோல் வாழ்க.

## சேறைத் தல புராணம்

மாதம் மும்மாரி பெய்க மறையவர்
வேத வேள்வி விளங்கச் சிவாகமம்
பூதி சாதனம் ஓங்க இப்பூதலம்
நீதி மன்னவர் செங்கோ னிபவாழ்கவே.

## புதுவைத் தலபுராணம்

திருவளர் புதுவை ஈசன் சேவடி சிறந்து வாழ்க
உருவளர் உலகம் ஈன்ற உமைசிவ காமி வாழ்க
குருவளர் திருவெண் ணீறு குலவியெக் காலும் வாழ்க
கருவளர் பிறவி நீத்த கருணைமெய் யடியார் வாழ்க.

## தாருகாபுரத் தலபுராணம்

கீத வேதங் கிளர்மக மல்குக
சீத மும்மழை திங்கடொறும் பெய்க
போத மெய்யற மாதி பொலிகுக
சாத லில்அடி யார்கள் தழைக்கவே.

## திருக்கோட்டூர் புராணம்

வந்தனை அடியார் மல்க வையக முழுதும் வாழ்க
சந்ததம் உமையாள் பாகன் சமீவனப் புராண மோங்க
செந்தமிழ் விளங்க நாளுந் திங்கண்மும் மாரி பெய்க
அந்தமில் கருமம் வெல்க அஞ்செழுத்து இலங்க அன்றே.



# சைவ சமயத்தவர்க்கு அன்பு வேண்டுகோள்

– சிவஸ்ரீ ஆ. ஈசுவரமூர்த்திப்பிள்ளை

சைவமே ராஜாங்க சமயம் : பரமசிவனாரே அச்சமய முழுமுதற்கடவுள். சமஸ்கிருத வேத சிவாகமங்கள் அவரருளிய முதல் நூல்கள். அவையே பாரததேச முழுவதற்கும் சைவசமய சர்வ பிரமாண சாத்திரங்கள். அவற்றோடு தமிழ்ச் சைவருக்குப் பன்னிரண்டு திருமுறைகளும், பதினான்கு சித்தாந்த சாத்திரங்களும், ஸ்ரீசிவஞான மஹாபாஷ்யமும் சர்வ பிரமாணங்கள். இருமொழிகளிலுள்ள அந்நூல்கள்தான் சைவசமய சாத்திர வரம்பு. அவற்றோடு ஒத்துச் செல்லும் சைவ ஞான நூல்கள் பிறவுமுள, அவையும் பிரமாணங்களே.

அச்சர்வ பிரமாணங்களோடு ஒத்துச்செல்லாத நூல்களோ, நூற்பகுதிகளோ பிரமாணங்களாகா. அவை தமிழாயினும் ஒதுக்கத் தகுந்தனவே. அச்சர்வ பிரமாண சாத்திரங்கள் இட்டுள்ள கட்டளைகள் பல. சைவ சமூகம் அவற்றுக்கடங்கவே வேண்டும். அதுவே அச்சமூகத்துக் கௌரவம். அம்முறையில் அச் சமூகத்தினர் ஒவ்வொருவரும் சிவதீக்ஷை பெற்றுக்கொள்க. சிவசின்னந் தரித்துக் கொள்க. ஆன்மார்த்த சிவபூசை யெழுந்தருளப் பண்ணிக் கொள்க. சைவ விரதங்களைச் சிரத்தை யோடனுட்டித்து வருக.

சைவாலயங்களைச் சிவாகம விதிப்படி நிருவகிக்க. அச்சேவையையும் ஆர்வத்தோடு புரிக. குருபூசைகளையும் அவ்விதிப்படி செய்க. சைவ ஆசிரியன்மாரையும் ஏனைச் சிவனடியார்களையும் பொதுநீக்கி வழிபடுக. சரியையாதி சாதனங்களை வழுவாமற் கடைப்பிடிக்க.

குடும்பங்களில் நடைபெறும் கலியாணம், சீமந்தம் சிரார்த்தம் முதலிய அனைத்தையும் சைவ முறைப்படி அதற்கதற் குரிய மந்திரங்கிரியை யாதிகள் சகிதம் செய்து மகிழ்க. அம்மந்திர மாதியவற்றைச் சிவாகமங்களிலிருந்து கிரமமாகத் திரட்டி வைத்துக் கொள்க. அவற்றுக்கிணக்கமான குலாசார சம்பிரதாயங்களையும் வேண்டுமாயிற் சேர்த்துக் கொள்க. சைவப்பெரு நூல்கள் மலிந்து கிடக்கிற தமிழ் சமஸ்கிருதங்களை நன்கு பயிலுக. அந்நூல்களை எல்லாந் திறம்பட கற்றாய்க. தமிழை ஒட்ட வையாமல் சைவத்தை எடுத்து பிற மாகாணங்களிலும் சென்று பரப்புக. பிற சமயங்களைக் குறை கூறற்க. சைவசமயத்தைப் பிறர் தூஷிக்கவும் இடங் கொடாதிருக்க.

